

விடியலின் விதை!

# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...

KALKI • 23.05.2010 • ரூ.10.00 • 96 பக்கங்கள்

- ஆறு வாரப் போட்டி அதிரடி!
- தங்கக் காசு பரிசு!

தவற விடாதீங்க...

கோடைக்கால கொண்டாட்டம்

## ஹெல்த் ஸ்பெஷல்

## தில்லுன்னு ஜோரா...

# கல்கி

23.05.2010

கோடைக்கால கொண்டாட்டம்
ஹெல்த் ஸ்பெஷல்

## ஆன்மிகம்



## அமரர் கல்கி பக்கம்



## அரசியல்



## சிறுகதைகள்



## தொடர்கள்



## ஹெல்த் ஸ்பெஷல்



## சினிமா



## சமூகம்

# திரைவிமர்சனம்

❑ ஹாலிவுட் கௌபாய் கதையை கோலிவுட் மசாலா கலந்து கொடுக்க முற்பட்டிருக்கும் சிம்புதேவன் ஏகத்துக்கும் சறுக்கியிருக்கிறார்.

❑ பதினெட்டாம் நூற்றாண்டில் நடக்கும் கதையென்று சொல்லிவிட்டு எம்.ஜி.ஆர்., மேஜர் சுந்தர்ராஜன், ஜெய்சங்கரையெல்லாம் காட்டத் துணிந்ததும், கரெண்ட்டே கண்டுபிடிக்கப்படாத அக்காலகட்டத்தில் மின்விளக்கைக் காட்டியிருப்பதும் என்ன லாஜிக் துணிச்சலோ?

❑ கௌபாய் கேரக்டர் என்றால் கம்பீரம், ரொமான்ஸ், ஹீரோயிஸம்... என தூள் பறக்கும். ஆனால், 'லாரன்ஸ் கௌபாய்' சின்ன புள்ளையாட்டம் சிணுங்குவதும், சிற்சில காட்சிகளில் சீறுவதும் உண்மையிலேயே 'சின்ன புள்ளத்தனமா' இருக்கு.

❑ பத்மப்ரியாவுக்கும் லாரன்ஸுக்குமான காதல் காட்சிகள் ரசிக்க வைப்பதற்குப் பதில் கண்களுக்குள் எரிச்சலை அள்ளிக் கொட்டுகின்றன.

❑ ஒற்றைக் கண் நாசர் திரையில் தோன்றும்போதெல்லாம் நம் காதில் புகை வருகிறது.

❑ செவ்விந்தியராக வரும் எம்.எஸ்.பாஸ்கரன் பாத்திரப் படைப்பில், அவரது மொழி பெயர்ப்பாளர் பேச்சில் மட்டும் சிம்புதேவன் 'டச்' தெரிகிறது!

❑ கௌபாய் கூட்டம் புதையலைத் தேடிக்



நகையில் பயணிக்கும் காட்சிகளில் விறு விறுப்பு கூடுவதற்குப் பதிலாகச் சலசலப்பே மிஞ்சுகிறது!

❑ படத்தில் ரசிக்கும்படியாக இருப்பது டி.முத்துராஜின் பேன்டஸியான செட்டும், லாரன்ஸ் ராகவேந்திராவின் நடனமும்தான்.

❑ வெறும் பிரம்மாண்டத்துக்காக சினிமா இலக்கணங்களை காவு கொடுத்திருக்கிறார் இயக்குநர்.

❑ ஜி.வி.பிரகாஷின் இசையில் மெச்சும்படி எதுவுமில்லை. அதனால், பாடலாசிரியர் வைர முத்துவும் காணாமல் போயிருக்கிறார்.

❑ திரையில் அழகாக வந்து போகும் லட்சுமி ராய்க்கு கதையில் என்ன வேலை கொடுப்ப தெனத் தெரியாமல் திணறியிருக்கிறார்கள்.

**இரும்புக்கோட்டை முரட்டுசிங்கம் - ஆகாசக் கோட்டை பொம்மை நரி!**

**- மகிமைராஜன்**



## இந்த வாரம் இவருதான்!

இந்த வார சம்மர் ஹெல்த் ஸ்பெஷலை தயா ரித்து வழங்கியவர் 50-க்கும் மேற்பட்ட நூல்களை எழுதி யுள்ள எழுத்தாளர் ஜி.எஸ்.சுப்ரமணியன். 'ஜி.எஸ்.எஸ்.' மற்றும் அருண் சரண்யா என்ற பெயர்களில் எழுதும் இவர், பற, **மனம்-மனம் அறிய ஆவல், விலங்குகள் ஆகிய தொடர் கதை களையும், குருக்ஷேத்ரம், தீராத விளை யாட்டு விட்டலன்** போன்ற தொடர்களையும் எழுதி வாசகர்களுக்கு நன்கு அறிமுகமானவர். பிரபல க்விஸ்மாஸ்டரும் கூட. பல பிரபல நிறுவனங்களின் ஊழியர்களுக்கு மனிதவளப் பயிற்சியாளராகவும் விளங்குகிறார். மனிதவள நிர்வாகம், பொருளாதாரம் ஆகிய பட்டமேற் படிப்புகளில் சிறப்பிடம் பெற்றவர்.




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

ஆசிரியர் : **சீதா ரவி**
உதவி ஆசிரியர்கள் :
**கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா**
வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், பா.கோபால்**

தொலைபேசி : 044 - 4343 8888
தொலைநகல் : 044 - 4343 8899

**ஆசிரியர் குழு :**
044 - 4343 8822
kalki@kalkiweekly.com

**விளம்பரப் பிரிவு :**
044 - 4343 8811
marketing@kalkiweekly.com

**சந்தா பிரிவு :**
044 - 4343 8833
subscription@kalkiweekly.com

**விற்பனை பிரிவு :**
044 - 4343 8844
sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி :
**www.kalkionline.com**

இணையதளத்தில்...
வாங்கி, வாசித்து, மகிழ...
**www.sangapalagai.com**

**சந்தா விவரம் (ஒரு வருடம்) :**
உள்நாடு : ரூ.500/-
வெளிநாடு : ரூ.3,800/-

கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

● ஆர்.மாதவராமன், கிருஷ்ணகிரி

**? சென்னையில் குறுகிய சந்துகளிலும் கூட மூன்று மாதங்களில் மினி பஸ் ஓடும் எனக் கூறுகிறாரே கே.என்.நேரு?**

! மைய சென்னையைச் சுற்றிலும் புதிதாகப் பல நகர்கள் தோன்றியுள்ளன. இத்தகைய குடியிருப்புகளிலிருந்து 'மெயின் ரோடுக்கு' வந்து பஸ் பிடிக்க வசதியாக மினி பஸ்கள் இயக்கப்படலாம். ''குறுகிய சந்து பொந்துகளில்கூட மினி பஸ் ஓடும்'' என்பது நடைமுறை சாத்தியமல்ல. சென்னை போக்குவரத்து மேம்பாடுக்கு மாஸ்டர் பிளான் அமலாக்கம் தேவை. மினி திட்டங்கள் உதவாது.

● ரேவதிப்ரியன், ஈரோடு

**? தொழிலாளர் தினத்தன்று விடுமுறை அளிக்காமல், டாஸ்மாக் கடைகளில் அன்றைய தினம் பணியாற்றியவர்களுக்கு இரட்டிப்பு ஊதியம் அறிவித்துள்ளாரே முதல்வர்?**

! அழுத பிள்ளைக்குக் கழுதைப் பால் கொடுத்த கதைதான்! விடுப்புக்கு ஈடாக இரட்டிப்பு ஊதியம். இரட்டிப்பு வியாபாரத்தை இழக்க விரும்பாத வியாபார நோக்கு. தொழிலாளர் எக்கேடு கெட்டால் என்ன!

● ஜி.பாக்கியலட்சுமி, சென்னை - 42

**? நாடு முழுவதிலும், அங்கீகாரம் பெறாத 200 கல்வி நிறுவனங்களும் 21 போலி பல்கலைக் கழகங்களும் கண்டறியப்பட்டுள்ளதாக பார்லிமென்டில் மத்திய அமைச்சர் கபில் சிபல் தெரிவித்துள்ளாரே?**

! படித்தவர்கள் என்று கருதப்படும் பலரின் நடவடிக்கைகளைப் பார்க்கும் போது, வந்திருக்கும் கணக்கு குறைவாகவே தெரிகிறது. அதே சமயம், பல நிகர்நிலைப் பல்கலைக் கழகங்களுக்கான அனுமதி ரத்து செய்யப்பட்டதை, அரசு வாபஸ் பெற இருக்கிறது என்ற செய்தி அதிர்ச்சி ஏற்படுத்துகிறது.

● த.கோவிந்தராஜன், குடியாத்தம்

**? திருமூலர் மூவாயிரம் ஆண்டுகள் வாழ்ந்ததாகச் சொல்கிறார்களே, உண்மையா?**

# தமிழுக்குக் குரல்

! அந்த அற்புதத்தை உண்மையென்று ஆதாரபூர்வமாக நிரூபிக்க இயலாது. ஆனால், திருமந்திரம் காலம் கடந்து வாழ்கிறது. அதன் மூலம் திருமூலரும் தான்!

● ஆர்.நாகராஜன், சென்னை - 117

**? ரேஷன் கடையிலும் கூட்டம், புடைவை - நகைக் கடைகளிலும் கூட்டம், கிரிக்கெட் பார்க்கவும் கூட்டம். நம் மக்களின் வாழ்க்கைத் தரம் உயர்ந்துள்ளதா? தாழ்ந்துள்ளதா?**

! பணப்புழக்கம் உயர்ந்துள்ளது. கறுப்புப்பணம் உருவாவதும் புழங்குவதும் ஏகமாக உயர்ந்துள்ளது. சராசரி இந்தியனின் வாழ்க்கைத் தரம் தரமற்றதாகவே தொடர்ந்து இருந்து வருகிறது.

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

**? ''இலங்கைத்**



● சோப்பும் சாமரமும்



● துணிவுக்குப் பாராட்டு!

தமிழர் படுகொலை முதல் பார்வதி அம்மாளைத் திருப்பி அனுப்பியது வரை, ராஜபக்ஷேவுக்கு ஆதரவாகச் செயல்படும் தமிழர் விரோதக் கட்சியான தி.மு.க.வை ஆட்சியிலிருந்து அகற்றுவதே எங்கள் முதல் வேலை'' என பொன்.ராதாகிருஷ்ணன் கூறுகிறாரே?

! இன உணர்வைத் தூண்டி வோட்டுப் பெற நினைக்கும் பொன்.ராதாகிருஷ்ணனின் கூற்று பலன் தராது. பெயரில் தான் பொன்; இந்த அறிக்கை பித்தளை என்பதைத் தமிழன் அறிவான்.

சாட்சியங்களும் அல்ல என்கிற விளக்கம் வலுவாக இருக்கிறது. வரவேற்கப்பட வேண்டிய தீர்ப்பு.

● அ.சுஹைல் ரஹ்மான், திருச்சி-21

? ''தமிழ்பேசத் தெரிந்தவர்களை நடிக்க வையுங்கள்; கதாநாயகிகளைத் தேடி மும்பைக்குப் போவதை தயாரிப்பாளர்கள் நிறுத்த வேண்டும்'' என குஷ்பு வேண்டுகோள் விடுத்துள்ளாரே?

! உஷார்! ஒரு தமிழ்நாட்டு பால் தாக்கரே உருவாகி வருகிறார்! அவருக்குத் தமிழே சரியாக உச்சரிக்க வரவில்லையே என்று யாரும் கேட்டுவிடக் கூடாது.

# கொடுக்கிறாரே குஷ்பு?

● மதுரை முருகேசன், தஞ்சாவூர்

? ஸ்டாலின் - அழகிரி இருவருக்குமுள்ள பிரச்னை, எதிரிகளுக்கு இடமளிக்காத பிரச்னை என்கிறாரே அமைச்சர் நெப்போலியன்?

! ஆமாமாம்! ஸ்டாலின் ஆளுங்களுக்கு அழகிரி இடமளிக்க மாட்டார்; அழகிரி ஆளுங்களுக்கு ஸ்டாலின் இடமளிக்க மாட்டார். நிற்க; அழகிரிக்கும் ஸ்டாலினுக்கும் இடையே பிரச்னை இருப்பதை, வெளிப்படையாக ஒப்புக்கொண்ட முதல் தி.மு.க. நபர் நெப்போலியன்தான். துணிவுக்குப் பாராட்டு!

● ராஜி ராதா, பெங்களூரு

? உண்மை கண்டறியும் சோதனை சட்ட விரோதம் என உச்சநீதிமன்றம் தீர்ப்பு வழங்கியுள்ளதே?

! அச்சோதனை முறைகள், விசாரணைக் கைதிகளுக்கு போதையூட்டிய நிலையில் நடத்தப்பெறுகின்றன என்பதால் அவை மனித உரிமை மீறல்; நம்பத்தகுந்த



★ இன்னொரு தாக்கரே!

☐ ரூ.150/- பரிசு பெறுபவர் :
ஜி.பாக்கியலட்சுமி, சென்னை-42
★ ரூ.75/- பரிசு பெறுபவர் :
என்.வி.ரமணி, சென்னை - 28

அவரது உச்சரிப்புத்தான் தூய தமிழ் என்று குஷ்பு ரசிகர் மன்றமும், தமிழை எப்படி வேண்டுமானாலும் உச்சரிக்க குஷ்புவுக்கு உரிமை உண்டு என்று உச்சநீதி மன்றமும் கூறிவிடும்!

● வி.சுபஸ்ரீ, தஞ்சை

*? போலி டாக்டர், போலி சாமியார், போலி மருந்து, போலி ஆவணம், காலாவதி மருந்து, உணவுப் பொருள்கள் என்று... நாடு எங்கே போய்க் கொண்டிருக்கிறது...?*

! நாடு போலி ஜனநாயகத்துக்கு வரவேற்பு கூறிக் கொண்டிருக்கிறது; மக்கள் போலி சந்தோஷத்தைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள்.

● மு.மதிவாணன், அரூர்

*? தனியார் பள்ளிகளுக்குக் கல்விக் கட்டணம் நிர்ணயம் செய்யப்பட்டுள்ளது பற்றி..?*

! கல்விக் கட்டணம் குறையும்; இதர மறைமுகக் கட்டணங்கள் உயரும். தரமான கல்வி அளிக்கும் அரசுப் பள்ளிகளை தாராளமாக உருவாக்குவதுதான் ராஜபாட்டை. தனியார் பள்ளிகள் மீது அடக்குமுறை செலுத்துவது ஊழல், அபாயங்கள் நிரம்பிய காட்டுப் பாதை.

● என்.வி.ரமணி, சென்னை - 28 ★

*? பிரிட்டிஷ் பார்லிமெண்டும் நம்முடையது போலவே 'தொங்கு சபை'யாக உருவாகிவிட்டதே - சில மாறுதல்கள் செய்து இந்த நிலைமையைத் தவிர்க்க முடியாதா?*

! தொங்கு நாடாளுமன்றமானால் என்ன? கூட்டணி ஆட்சி அமைந்து விட்டுப் போகிறது! நேர்மையான அரசியல்வாதிகள் இருப்பின் பிரச்னை இல்லை. நேர்மையற்ற அரசியல்வாதிகள் எனில், எத்தகைய சீர்திருத்தமும் பயன் தரப் போவதில்லை!

● என்.பாலகிருஷ்ணன், மதுரை

*? "கலைஞர் தமிழால் எங்களைக் குளிப்பாட்டிக் கொண்டிருப்பதால் நாங்கள் அவருக்கு சோப்பு போட வேண்டிய அவசியம் இல்லை" என்கிறாரே கமல்ஹாசன்?*

! சோப்பு போட்டால் என்ன? வார்த்தைகளால் சாமரம் வீசினால் என்ன...? இரண்டும் ஒன்றுதான்!

● எம்.மிக்கேல்ராஜ், சாத்தூர்

*? பாசத்தலைவனுக்குப் பாராட்டுவிழாதான் நடந்து முடிந்து ஒரு கலக்கு கலக்கி விட்டதே. அதைத் திரும்பவும் கலைஞர் டீ.வியில் ரிப்பீட் செய்ய வேண்டிய அவசியம் என்ன?*

! என்ன இப்படிக் கேட்டுட்டீங்க? திரையுலகம் விழா எடுத்ததே தமிழுலகத்துக்கு டீ.வி. மூலம் ஃபிலிம் காட்டத்தானே...!







★ சிந்தனை அறிக்கை! ★ கழுதைப் பால் சமாதானம்! ★ சந்து - பொந்து சுகம்!

# சூரியனை எதிர்க்க... விசிறிகள்!



ஐம்பது கார்கள் அணிவகுத்து வரவில்லை. இருபது - முப்பது மோட்டார் சைக்கிள்கள் சீறிப் பாயவில்லை. மேடை போட்டு முழங்கவில்லை. மைக் பிடித்து அலறவில்லை. ஆடம்பர அலங்கார ஆர்ப்பாட்டங்கள் ஏதுமின்றி, ஒவ்வொரு வீடாகச் சென்று, பனையோலை விசிறி தந்து வியக்க வைத்துள்ளனர் திருச்சி மாநகர தே.மு.தி.க. கட்சியினர்.

திருச்சி புத்தூர், சவேரியார் தெருவில் வீட்டுக்கு வீடு விசிறியையும் மெழுகு வர்த்தியையும் தந்துள்ளனர். ''சுட்டெரிக்கும் வெயிலில் மின்வெட்டும் கடுமையாக உள்ளது. சாதராண வீடுகளில் வசித்து வருபவர்கள் ஃபேன் இல்லாமல் வீட்டிலிருக்க முடியாது. அவர்களுக்கு உதவும் வண்ணமாகவும், அதே நேரத்தில் மின்வெட்டின் துயரங்களை அரசின் பார்வைக்குக் கொண்டு செல்லும் விதமாகவும் இந்த வினியோகம்!'' என்றார்கள் தே.மு.தி.க. மகளிரணி செயலாளர் பத்மாவதியும், துணைச் செயலாளர் சித்ரா விஜயகுமாரும்.

''தினசரி மூன்று மணி நேர கரண்ட்டு கட், தொடர்ந்து கண்டிப்பா கடைபிடிக்கப்பட்டு வருதுங்க. இதுல பராமரிப்புனு வேற ஒரு நாள் முழுதும் (பகலில்), திடீர்னு கரண்ட்டை கட் பண்ணிடறாங்க. மண் குடிசை வீட்டுலயும், ஓலைக் குடிசையிலயும் வசிக்கறவங்க இந்தக் கடுங்கோடையில் வேர்வையிலயும் கசங்கல்லயும் ரொம்பவே கஷ்டப்படறாங்க. அதுலயும் கைக்கொழந்தைங்க, கர்ப்பிணி தாய்மாருங்க, வயசானவங்க பாடு சொல்ல முடியாது. அவுங்க வீட்ல எல்லாம் இன்வெர்ட்டரும் கிடையாது. திறந்து வெச்சா காத்து வர்றதுக்கு சன்னல் வசதியும் இல்ல. அதனால, குடிசைப் பகுதிகளாகத் தேர்வு பண்ணி, அங்ஙன வசிக்கிறவங்களுக்கு பனையோலை விசிறி தந்தோம்ங்க! எதிர்ப்பைக் காட்ட மட்டுமில்லாமல், மக்களுக்கு உதவியாகவும் இருக்கவே இந்த யுக்தி!'' என்கிறார் தே.மு.தி.க.வின் திருச்சி மாநகர் மாவட்ட செயலாளர் விஜயராஜன்.

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# வட்ட மேஜை

"கதை வந்துருச்சு... கங்கிராட்ஸ்" நல்ல நகைச்சுவை. நீங்களாவது 'கல்கி'யில் அவருக்கு ஒரு வாய்ப்பு கொடுத்துப் பாருங்களேன்..?

**-வானவில் மூர்த்தி, கடலூர்**

காந்திஜிக்குக் கோயில் தேவையா என்ற கேள்விக்கு, மிகப் பொருத்தமான பதிலைச் சொல்லித் தராக அசத்திய விதம்வெகு அற்புதம்.

**- எஸ்.கே.மூர்த்தி, கும்பகோணம்**

இந்திரா பார்த்தசாரதி 'நாகரிகம்' பற்றி அளித்த விளக்கம் சிந்திக்க வைத்தது!

**- பா.அச்சுதன், வயலூர்**

சென்னையில் கார் வைக்கவே இடமில்லை. இதில் செல்லப் பிராணிகள் எப்படி வளர்க்கப் போகிறார்கள்?

**-பி.நாகலெட்சுமி, அண்ணாநகர்**

அதீதமான பாச உணர்வை மனதின் அடித்தளத்தில் பதியம் போட்டு வைத்த ஒரு நடுத்தரவர்க்கக் குடும்பத் தலைவரின் மனப்போராட்டத்தை எதிரொலிக்கும் 'உயிர்த்தெழுகை' சிறுகதையின் நிகழ்வுகள் உள்ளத்தை நெருடியது.

**- எஸ்.எம்.பாலசுப்ரமணியன், போடிநாயக்கனூர்**

தேர்வு முடிவுகள் வரப்போகின்ற இந்த நேரத்தில் அமரர் கல்கி அவர்கள் 57 வருடங்கள் முன்பு மிக அருமையாக எழுதிய கருத்துக்களை 'கல்வெட்டுகள்' மூலம் வெளியிட்டதற்கு பாராட்டுக்கள்.

**- ஆர்.ஷியாமளா, மந்தைவெளி**

பரிசுக் கடிதத்தில் மும்பை வாசகர், இராஜராஜன் கட்டியது கங்கை கொண்ட சோழபுரம் கோயில் என்று குறிப்பிட்டுள்ளது தவறு. தஞ்சை பெரியக் கோயிலைக் கட்டிய தனது தந்தை இராசராசனைப் போல தானும் ஒரு கோயிலைக் கட்ட வேண்டும் என்னும் ஆர்வத்தில் இராஜேந்திர சோழனால் கட்டப்பட்டதே கங்கை கொண்ட சோழபுரம் கோயில்.

**- பி.இராஜேந்திரன், லோயர் அணைக்கட்டு**

## 100/100 உண்மை!

காதல் காவியத்தை ஏழு ஸ்வரங்களாய் ராகமாலிகையாக்கி, பல்லவி... அநுபல்லவி... சரணம்... மூன்றையும் குழைத்துக் கச்சேரி பண்ணிக் கலாய்த்துள்ளார், வசந்த பாரதி!

**- 'இனாம்'கேசவன், குருமலை**

சம்மருக்கு டெல்லி செய்தி சூடாக இருந்தாலும் படிக்கச் சுவையாக இருந்தது.

**- ஜி.வெங்கடரமணன், மயிலாப்பூர்**

தெரியாத பல விஷயங்களைத் தெரிந்துகொள்ள நல்ல வாய்ப்பாக இருக்கிறது 'வாமன தேசங்கள்' பகுதி.

**-'குலசை' க.மீ.நஜ்முதீன், காயல்பட்டினம்**

கிரிக்கெட்டில் இந்தியாவின் நம்பிக்கை நட்சத்திரம் சுரேஷ் ரெய்னா என்பது நூற்றுக்கு நூறு உண்மை.

-எம்.மிக்கேல் ராஜ், சாத்தூர்

"கோடை வகுப்புகள் கொள்ளையா?" கட்டுரை, வரைமுறையில்லாமல் கட்டணம் வாங்குபவரைக் கண்டிக்கும் வகையில் அமைந்திருந்தது.

-ஜே.துரைராஜ், சென்னை

மகாராஜா நடத்தப் போகிற 'ஆன்மிகம்' கலக்காத 'பட்டினப் பிரவேசம்' கோவை செம்மொழி மாநாடு. தமிழகத்திலே இதுவரை நடந்து முடிந்த மாநாடுகள் எல்லாமே மொழிக்கான மாநாடுகள் அல்ல. அரசியல் மாநாடுகளே. இதைப் பற்றியெல்லாம் முழுமையாகத் தெரிந்தும் ஆர்.வெங்கடேஷ் போன்றோர் 'யூனிகோட்' பற்றிக் கவலைப்படுவது வேடிக்கையாக இருக்கிறது.

-இரா.இராஜேந்திரன், மயிலாடுதுறை

## பரிசுக்கடிதம்

கிழக்கு பதிப்பகம் வழங்கும் ரூ.250 மதிப்புள்ள நூல்கள் பரிசு பெறும் கடிதம்:

கோவையில் செம்மொழி மாநாடு நடக்கவிருக்கும் இச்சமயத்தில், விமான நிலையத்திலுள்ள ஒரே ஒரு புத்தகக் கடையில், 'தமிழ் செம்மொழி மாநாடு நடைபெற இருக்கிறது. உங்கள் கடையில் ஒரு தமிழ்ப் புத்தகமும் தென்படவில்லையே' என்று கேட்டதுதான் தாமதம். கடைக்காரர் பொரிந்து தள்ளிவிட்டார். "கடைக்கு வாடகை ஒன்றரை லட்ச ரூபாய். விற்காத தமிழ்ப் புத்தகங்களை நான் ஏன் வைக்க வேண்டும்? உங்களுக்காக என்னால் விலை போகாததை வைக்க முடியாது" என்றாரே பார்க்கலாம். வாயை மூடிக் கொண்டு வெளியே வருவதைத் தவிர எனக்கு வேறு வழி தெரியவில்லை!

- சித்ரா மூர்த்தி, சென்னை-20.

# ராஜாவைக் காப்பாற்றும் கனிவான சக்தி எது?

**மத்திய அமைச்சர் ராஜா பேரிலான 2ஜி முறைகேடு குற்றச்சாட்டுகள், அதையொட்டிய நடவடிக்கைகள் என்று கொதிகலனாய் விவகாரம் வளர, தி.மு.க. தலைமை ஏதும் நடவாதது போல் மௌனமாக இருக்கிறதே... எதிர்க்கட்சிகளின் கண்டனக் குரல்கள் இங்கே:**

*ராமகிருஷ்ணன், தமிழக மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர்:*

''சுதந்திர இந்தியாவில் இதுவரை இதுபோன்ற 'மெகா' ஊழல் நடைபெற்றதில்லை. அரசியலில் நியாயம், நேர்மை, தூய்மை இருக்கவேண்டுமென்ற எண்ணம் தி.மு.க. தலைவருக்கு இருந்திருந்தால், இத்தனை நேரம் ராஜாவை மத்திய அமைச்சர் பொறுப்பிலிருந்து விலக்கிக் கொண்டிருப்பார். ஆனால், இப்படிச் செய்யாததன் மூலம், மற்றவர்கள் மீது குற்றம் சாட்டும் தார்மிக உரிமையைக் கூட கருணாநிதி இழந்துவிட்டார் என்றுதான் சொல்ல வேண்டும்.

ஊழல், முறைகேடுகள் நடந்திரு... பதற்கான முகாந்திரம் இருப்பதாக மத்தியப் புலனாய்வு நிறுவனம், தலைமைக் கணக்கு தணிக்கை அதிகார... தலைமை கண்காணிப்... ஆணையர் ஆகியோ... சொல்லியும், ஒருவ... அமைச்சர் பொறுப்பி... நீடிக்கிறார் எனில், அ... நம் நாட்டுக்கும், ம... களுக்கும்தான் அ... மானம்.

மேலும், அலை... கற்றையை ஏல... விடாமல், முதலி...


ராமகிருஷ்ணன்

வந்தவருக்கு முதலில் என்ற... தூக்கிக் கொடுத்தபோது... விண்ணப்பம் வாங்... வேண்டிய தேதியும், செ... நிறுவனங்களின் வசதி... காக முன் கூட்டியே... மாற்றப்பட்டது. இதை... எதிர்த்து தில்லி... உயர்நீதி மன்றத்தில் ஒரு நிறு... வனம் வழக்குப் போட, முறைகே... கள் நடந்ததற்கான சாத்தியங்களை உறு... செய்தது உயர்நீதிமன்றம். இதை எதிர்த்... உச்சநீதிமன்றத்தில் அப்பீல் செய்தபோ... 'தலையிடமாட்டோம்' என்று சொல்...

விட்டது உச்சநீதிமன்றம். ராஜாவை டிஸ்மிஸ் செய்ய இது ஒன்றே போதுமே பிரதமருக்கு!

சசி தரூர் மீது ஐ.பி.எல். விவகாரம் தொடர்பாகக் குற்றம் சாட்டப்பட்டபோது, காங்கிரஸ் தலைமையால் உடனடியாக அவர் ராஜினாமா செய்ய வைக்கப்பட்டார். அப்படியிருக்க, ராஜாவை நீக்கும் தைரியமில்லாத கோழையாக காங்கிரஸ் நடந்து கொள்வதேன்?

2009-ல் இதே துறையை மீண்டும் கேட்டு வாங்க தி.மு.க. பிடிவாதம் பிடித்த விதம், அரசியல் உலகத்தையே ஓர் ஆட்டு ஆட்டியது. அதற்கான காரணம் இப்போது மேலும் தெளிவாகியிருக்கிறது! நீரா ராடியா போன்ற அரசியல் தரகர்கள், தொலைத்தொடர்பு வர்த்தகப் பிரமுகர்கள், காங்கிரஸ் கட்சி மற்றும் ராஜா, கனிமொழியுடன் இதற்காகப் பேசியிருப்பதாக ஆடியோ டேப்கள் வேறு நாறடிக்கின்றன. இது தொடர்பாகக் கேள்வி கேட்க முயன்ற மீடியா நிருபரை ராஜா தள்ளிவிட்டது கண்டிக்கத்தக்கது.

**ஜாதி முலாம் பூசி ஊழல்வாதியைக் காப்பாற்றக் கருணாநிதி முயல்வது ஏன்?**

இந்த நிலையில், ''ராஜாவைக் காப்பாற்ற ஜாதியைக் கையிலெடுப்பது, கருணாநிதி போன்ற மூத்த அரசியல்வாதிகளுக்குக் கொஞ்சமும் அழகல்ல. ஜாதி முலாம் பூசி ஊழல் வாதிகளைக் காப்பாற்றக்கூடாது.

சமீபத்தில் எங்கள் மத்தியக் குழு எடுத்த முடிவின்படி, ராஜா விலகும் வரை பாராளுமன்றம் உள்ளேயும், வெளியேயும் போராடுவோம்.''




தமிழக பா.ஜ.க. தலைவர் பொன்.ராதா கிருஷ்ணன்:

அமைச்சர் ராஜா 'அலைக்கற்றை' நாயகர் மட்டுமல்ல; சில காலம் மத்தியில் சுற்றுச்சூழல் அமைச்சராக இருந்தபோதே சர்ச்சைகளில் சிக்கியவர். இவரது மனைவியும் உறவினர்களும் பல்வேறு நிறுவனங்களில் பொறுப்புகளில் இருந்ததை அரசுக்குத் தெரியப்படுத்தவில்லை. இது தவிர, சென்னை உயர்நீதிமன்ற நீதிபதியை மிரட்டியதாக வேறு பேச்சு அடிபட்டது.

அலைக்கற்றை ஒதுக்கீட்டில் பயனடைவதற்காக ஒரு நிறுவனத்தையே உருவாக்கியதாகக் குற்றச்சாட்டு. ஒரு குறிப்பிட்ட நிறுவனம் இந்தியாவில் உள்ள 13 டெலிகாம் வட்டங்களுக்கு 1537 கோடி கொடுத்து உரிமையை வாங்கியது. ஆனால், அடுத்த சில மாதங்களிலேயே 4500 கோடிக்கு விற்றது. இதற்கு என்ன பொருள்? அதிக விலைக்கு விற்க வேண்டிய சரக்கை, குறைந்த விலைக்கு அள்ளிக் கொடுத்திருக்கிறது அமைச்சகம்! அரசுக்கு இழப்பு அறுபதாயிரம் கோடியா அல்லது ஒரு லட்சம் கோடியா என்பது, விசாரணையில்தான் தெரியும். அப்படிப்பட்ட விசாரணை முறையாகவும் இடையூறின்றியும் நடக்க, அமைச்சரைப் பதவி நீக்கம் செய்வதுதான் முறை. காங்கிரஸ் இது விஷயத்தில் நடந்துகொள்வதைப் பார்த்தால், கூட்டுக்கொள்ளையோ என்று கூடத் தோன்றுகிறது.

தொலைத் தொடர்பு அலுவலகத்தில் சி.பி.ஐ. சோதனை செய்யும் அளவுக்கு நிலைமை சென்றது. இப்போது விசாரணை அதிகாரியே மாற்றப்பட்டு விட்டாராம். இந்த முறைகேடுகளைப் பற்றி டெல்லி பத்திரிகைகளும், தொலைக்காட்சிகளும் விடாமல் அம்பலப்படுத்தி வருகின்றன. ஆனால், தமிழக மீடியா மௌனம் சாதிக்கிறது; அல்லது பட்டும் படாமல் நழுவுகிறது. இதுதான் தமிழ் நாட்டுப் பத்திரிகைகள் சுதந்திரமா?

## இந்த முறைகேடு பற்றி மௌனம் சாதிப்பதுதான் பத்திரிக்கைச் சுதந்திரமா?

ஜாதிப் பெயரைச் சொல்லி ராஜாவுக்கு பாதுகாப்பு அரணாக இருப்பதன் மூலம் ஆதிதிராவிட சமுதாயத்தையே அவமானப்படுத்துகிறார் கருணாநிதி. அந்தச் சமுதாயத்திலிருந்த சகஜானந்தர், கக்கன் போன்ற நேர்மையாளர்கள் அரசியலில் தங்கள் தூய்மையான முத்திரையைப் பதித்திருக்கிறார்கள். அடுக்கடுக்கான ஆதாரங்கள் அணிவகுத்து வந்த பின்னரும் ராஜா தலைமையால் காப்பாற்றப்படுகிறார் என்றால், அதற்குக் காரணம் ஒரு கனிவான சக்தியாகத்தான் இருக்க வேண்டும் என்று மக்கள் பேசத் துவங்கி விட்டனர்.

**- ப்ரியன்**

# மணிவாசகர் பதிப்பகத்தின்
# தமிழ்ச் செம்மொழி மாநாட்டுச் சிறப்பு வெளியீடுகள்

சங்க இலக்கியங்கள் முழுவதும் மூலமும், தெளிவுரையும் பத்துப்பாட்டு எட்டுத்தொகை **விலை. [illegible] - ரூ. 600**

பதிப்புத் துறையில் பொன்விழா காணும் மணிவாசகர் பதிப்பகம் உலகத்தமிழராய்ச்சி நிறுவன மேலாண் இயக்குநர் அறிஞர் ச.வே. சுப்பிரமணியன் அவர்களைக் கொண்டு சங்க இலக்கியங்களான பத்துப்பாட்டிற்கும் எட்டுத்தொகைக்கும் தெளிவுரையுடன் மக்கள் பதிப்பாக மலிவு விலைப் பதிப்பாக சூன் மாதத்தில் மிகக்குறைந்த விலையில் வெளியிட உள்ளோம்.

| நூல் பெயர் | பக்கம் | விலை. ரூ. |
|---|---|---|
| பத்துப்பாட்டு எட்டுத்தொகை I, II | சுமார் 3000 பக்கங்கள் டெம்மி 1/8 | 1100 |
| | செம்மொழி மாநாட்டுச் சிறப்புக் கழிவு | − 300 |
| | | 800 |
| | மெய்யப்பன் அறக்கட்டளை உதவித்தொகை | − 200 |
| | செலுத்த வேண்டிய தொகை | 600 |

இந்நூல்கள் ஒவ்வொரு பள்ளியிலும், ஒவ்வொரு தமிழ் ஆசிரியரிடமும் தமிழறிஞர்களிடமும் தமிழர் இல்லந்தோறும் இடம்பெற வேண்டும் என்ற நல்ல நோக்கில் மிகக் குறைந்த விலையில் முன் வெளியீட்டுத் திட்டத்தின் வாயிலாக வெளியிடப் பெறுகின்றன.

**D.D. அனுப்ப வேண்டிய பெயர் - மணிவாசகர் பதிப்பகம் - சென்னை**

தங்களுக்கு அருகிலுள்ள எங்கள் கிளைகளிலும் 30.5.2010 வரை பதிவு செய்து கொண்டு நேரில் பெற்றுக் கொள்ளவும்.

அஞ்சலில் பெற விரும்புவோர் பதிவு அஞ்சலுக்காக ரூ. 50/- சேர்த்து ரூ. 650/- அனுப்புங்கள்.

**மணிவாசகர் நூலகம்**

12-B, மேல சன்னதி, சிதம்பரம் - 608001. ✆ : 04144-230069
31, சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை - 600108. ✆ : 044-25361039
6, சிவஞானம் தெரு, தி.நகர், சென்னை - 600017. ✆ : 044-24357832
15, ராஜு வீதி, கோவை - 641001. ✆ : 0422-2397155
296/134, செரி சாலை, சேலம் - 636001. ✆ : 0427-3207722
28, நந்தி கோவில் தெரு, திருச்சி - 620002. ✆ : 0431-2706450
110, வடக்கு ஆவணி மூல வீதி, மதுரை - 625001. ✆ : 0452-2622853

---

"ரிஷி வம்ஷ்" வழங்கும் : **லைஃப் ஸ்டைல் கோர்ஸ்** நிலை - ① 2, 3, 4

# வேத ஞானம் & யோகப் பயிற்சி

2010 - மே 26 மாலை 6 மணி முதல் மே 31 இரவு 8 மணி வரை

**பாடத்திட்டம் : 1. ரிஷிகளின் கல்வி –** வேதம் என்பது என்ன? என்ன சொல்கிறது? கடவுள் உண்மையில் இருக்கிறாரா? எங்கே ? எத்தனை? இருந்தால் ஏன் வறுமை, ஊனம், அநியாயம், விபத்துக்கள்... எல்லாம் இருக்கின்றன? விதி என்பது உண்மையா ? விதியை மதியால் வெல்ல முடியாதா? பாவம் செய்பவர்கள் வளமாக இருப்பது ஏன்? புண்ணியம் செய்பவர்கள் கஷ்டப்படுவது ஏன்? ஒருவர் வாழ்வில் வரும் உறவுகள் மற்றும் நிகழ்ச்சிகளுக்கு என்ன காரணம்? ஸ்வர்கம், நரகம்...14 உலகங்கள் இருக்கின்றனவா? எங்கே ? முற்பிறவி மறுபிறவிகள் உண்மையா ? இருந்தால் ஏன் நினைவில்லை ? மரணத்திற்குப் பின் ஜீவனுக்கு என்ன ஆகிறது? என் குழந்தைகளின் நல்வாழ்விற்கு உதவ நான் அறிந்திருக்க வேண்டியவை என்று இருக்கின்றனவா? என்ன? ஸாக்ஷாத்காரம், ஆத்ம ஞானம், மோக்ஷம் : விடுதலை, ....போன்ற உங்கள் வாழ்க்கையைப் பற்றிய உண்மைகள் & ரகஸ்யங்கள்

**2. யோகாஸனம் 3. ப்ராணாயாமம் 4. ஆரோக்ய உணவுக்கல்வி 5. ஸ்லோகப் பயிற்சிகள் 6. அடிப்படை ஸம்ஸ்க்ருதம்**



**இடம் :** ஜெயராம் கல்லூரி, சின்னத் திருப்பதி, சேலம் - 636007.

**முன் பதிவு செய்யக் கடைசி நாள் :** 2010 மே 10.

**கட்டண விதிகள் :** ஆண்கள் - பெண்கள் (வயது 20-50) ரூ. 1000/-, மாணவ - மாணவியர் (வயது 15-25) ரூ. 500/-

**விபரங்களுக்கும், விண்ணப்பத்திற்கும்** - 9789325300, 9894353437.

**எல்லா விதி விலக்குகளுக்கும் :** ஆசார்யர் பாரத சைதன்யர் - 9789330703, 9585457437, 9688357151

**குடும்பத்துடன் பங்கேற்று பயனடைய அன்புடன் அழைக்கிறோம் !**



# கல்கி



2010 மே 23
விக்ருதி வைகாசி 9
மலர் : 68
இதழ் : 43

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## கைகொட்டிச் சிரிக்குது சீனா!

**சீ**னாவுடன் நல்லுறவு வளர்த்துக்கொள்ள அமைச்சர் ஜெயராம் ரமேஷ் விரும்புவதை யாரும் ஆட்சேபிக்க முடியாது. சுற்றுச்சூழல் தொடர்பான சர்வதேச மாநாடுகளில் இந்தியா - சீனா கை கோப்பது நமது தரப்புக்கு வலிமை சேர்க்கும் என்பதும் ஏற்கத்தக்கதுதான். அதற்காக பெய்ஜிங் சென்று ஜெயராம் ரமேஷ் இந்திய உள்துறை அமைச்சகத்தை விமர்சித்தும், விட்டுக்கொடுத்தும் பேசியது அழகல்ல. கோபன்ஹேகனில் (சுற்றுச்சூழல் உச்சி மாநாடு), தமது சுற்றுச்சூழல் அமைச்சகம் வளர்த்த சீன நல்லுறவுகளை, உள்துறை அமைச்சகம் நசிக்கச் செய்து வருவதாக அவர் பேசியது, இந்திய இறையாண்மைக்கு இழைத்த அவமதிப்பாகக் கொள்ளத்தக்கது. அயல்நாடு செல்லும் சராசரி இந்தியர்கள்கூட தாய்நாட்டை விட்டுக்கொடுத்துப் பேசமாட்டார்கள். ஆனால், பொறுப்பாகப் பேசவேண்டிய ஓர் அமைச்சர் அவ்வாறு செய்திருப்பது அதிர்ச்சி தருகிறது.

அமைச்சகங்களுக்கிடையே நிலவும் கொள்கை மாறுபாடுகளால் விளையும் முரண் சூழல்கள் என்பன, ஒரு குடும்பத்துக்குள் எழும் வேறுபாடுகள் போலத்தான். அவற்றை அமைச்சரவைக் கூட்டத்தில்தான் அலசி தீர்வு கண்டாக வேண்டும். பொது இடங்களிலும் பத்திரிகையாளர் மத்தியிலும் அயல்நாடுகளிலும் அமைச்சர்களுக்கிடையேயான கருத்து மாறுபாடுகளைக் கசியவிடுவது சரியல்ல; பகிரங்கப்படுத்தி விமர்சிப்பதோ அபாயகரமானது. இந்தியப் பகுதிகளில் சீன ஆக்கிரமிப்பு என்பது

அரசியல் நாகரிகம்
வாயை மூடிக்கிட்டு இதைப் படி!
ஜெயராம் ரமேஷ்




நமது உள்துறைக்கும் அயலுறவுத் துறைக்கும் தொடர் தலைவலியாக இருந்து வருகிறது. இதனால், இங்கே நிகழும் சீன தொழில் முதலீடுகள் குறித்தும் எச்சரிக்கை உணர்வுடன் செயல்படுவது அவசியமாகிறது. சீனா ஜனநாயக நாடல்ல என்பதால், தனது ஒற்றாடல் தேவைக்குத் தனியார் நிறுவனங்களை (குறிப்பாகத் தொலைத் தொடர்பு நிறுவனங்களை) பயன்படுத்தவும் தயங்காது.

அமைச்சராக இருப்பவர் சிந்தனையாளராக, அறிவாளியாக இருந்தால் மட்டும் போதாது. அதைக் காட்டிலும் பன்மடங்கு பொறுமையும், இங்கிதமும், தன்னடக்கமும் படைத்தவராக இருக்க வேண்டியது அவசியம். இந்த விஷயங்களில்தான் சுற்றுச்சூழல் அமைச்சர் தடுமாறியிருக்கிறார். சீன நாளிதழ்கள் ஜெயராம் ரமேஷுக்கு ஆதரவாகக் கருத்து தெரிவித்திருப்பதும், இந்தியா, தங்கள் நாட்டை எவ்வாறு நடத்தவேண்டும் என்று அறிவுரை கூறியிருப்பதும், நமது பிரதமருக்கும் உள்துறை அமைச்சகத்துக்கும் மிகுந்த தர்மசங்கடம் ஊட்டும் நிகழ்வுகள்.

அமைச்சரின் தடுமாற்றத்தினால், சீனா ரகசியமாகச் சிரித்துக்கொண்டிருக்கும் என்பதில் ஐயமில்லை. அருணாசலப் பிரதேசத்தை அநியாயமாகத் தமது வரைபடங்களில் தமக்கு உரியதாகக் காட்டியுள்ள சீனா, தமக்கு ஓர் இந்திய அமைச்சர் வரிந்துகட்டிக் கொண்டு வக்காலத்து வாங்குவார் என்று எதிர்பார்த்திருக்க வாய்ப்பில்லை. எதிர்பாராதது கிட்டிய மகிழ்ச்சியுடன், இந்திய அமைச்சரவையில் ஊரறிய உலகறிய பிளவு ஏற்பட்டுள்ளது என்கிற நிலைமையும் சீனாவைப் பலப்படுத்துகிறது.

இத்தனைக்கும் காரணமான அமைச்சர் ஜெயராம் ரமேஷை, பிரதமர் கண்டித்ததோடு நிறுத்திக் கொண்டதுதான் வியப்பு. அவரது ராஜினாமாவைக் கோரியிருந்தால் அனைத்து அமைச்சர்களுக்கும் மட்டுமின்றி, சீனாவுக்கும் அது வலுவான எச்சரிக்கையாக அமைந்திருக்கும். ●

# எதுக்கு வந்தாங்க?

சினிமா மட்டுமின்றி
இலக்கியம்
இன்னபிற கலைகளிலும்
தேர்ந்த
பன்முக வித்தகி ஊர்வசி
நம்ம கல்கி அலுவலகம்
வந்தாங்க...

- அமரர் கல்கி கதையைப் படமெடுக்கவா?
- ஆய்வுக்குக் குறிப்பெடுக்கவா?
- வாசகர்களுக்கு ஜாலி நிகழ்ச்சி ஏற்பாடு செய்யவா?
- கல்கி ஆபீஸில் ஷூட்டிங்கா?

அட... கொஞ்சம் பொறுங்களேன்.
அப்புறமா சொல்லுறோம்...







***நிஜம் நின்று வெல்லும் - கே.பி. ஜனார்த்தனன் - வானதி பதிப்பகம், தி.நகர், சென்னை - 17. விலை ரூ.70/-***

வாழ்வில் ஏதேதோ நிகழ்ச்சிகள், காட்சிகள், அசைவுகளை நாம் சந்திக்கிறோம். அவற்றில் பிடித்ததை நாம் எடுத்துக் கொள்கிறோம். சிலவற்றை வெறுக்கிறோம். இந்நூலாசிரியர், பல்வேறு பிரபல இதழ்களில் எழுதிய

# அன்பின் விளைவுகள்!




நூல் அறிமுகம்

இருபத்தி மூன்று சிறுகதைகளில் (நூலாகத் தொகுக்கப்பட்டுள்ளன). வாழ்க்கையில் அன்பின் பரிமாணம் நிகழ்த்தும் விளைவுகளைச் சித்தரித்துள்ளார். அன்பின் அடிநாதம் இழையோடும் இக்கதைகளை, அன்றாடம் நாம் சந்திக்கும் மனிதர்களை வைத்து எழுதியுள்ளார். நிச்சயம் படிக்க வேண்டிய சிறுகதைத் தொகுப்பு!

***ஹாய் மதன் - பாகம் 7 - விகடன் பிரசுரம், 757, அண்ணாசாலை, சென்னை - 2. விலை ரூ.95/-***

ஆனந்த விகடனில், கார்டூனிஸ்ட் மதன் கேள்வி - பதில் பகுதியில் வரலாறு, விஞ்ஞானம், சமூகம், அரசியல் குறித்து நகைச்சுவை உணர்வுடன் வாசகர்கள் ரஸிக்கும்படியாகப் பதில்கள் வழங்கிவருகிறார். அவற்றைத் தொகுத்து நூலாகவும் விகடன் பிரசுரம் வெளியிட்டுள்ளது. இந்த ஏழாவது தொகுப்பிலும், அவரது ரஸனை மிகுந்த பதில்கள், வாசகர்களைச் சந்தோஷப் படுத்துகின்றன. எடுத்துக்காட்டாக, உலகில் ஃபோபியா இல்லாத மனிதர்களே இல்லை என்றும், குறைந்த பட்சம் ஈக்கோ ஃபோபியா இல்லாதவர்கள் (பய உணர்வு) இல்லை என்பதையும் வெகு சுவாரஸ்யமாகக் கூறுகிறார். பலநூல்களை ஒட்டுமொத்தமாகப் படித்த உணர்வை மதன் பதில்கள் தருகின்றன.

***திறனாய்வுத் தீர்ப்புகள் - எம்.எஸ்.தியாகராஜன் - தமிழ்ச் சோலைப்பதிப்பகம், சென்னை - 33. விலை ரூ.100/-***

பொதுவாகத் தமிழில், சரியான திறனாய்வு நூல்கள் அதிகமாக வெளிவருவதில்லை. தமிழ்ப் படைப்பாளிகளின் தரத்தையும், உண்மையான இலக்கிய ரசனையையும் தெரிந்து கொள்ள விமர்சனங்கள் உதவுகின்றன. இவ்வகையில், திறனாய்வுச் செம்மல் எம்.எஸ்.தியாகராஜன், காய்த்தல் உவத்தல் இன்றி ஜெயகாந்தன்,இலக்கியச் சிந்தனைச் சிறுகதைகள், நா.காமராசனின் கவிதைகள்' என எல்லோர் படைப்புகளையும் விமர்சனம் செய்துள்ளார். மிக எளிய நடையில், விறுவிறுப்பான தொனியில், அமைந்துள்ள இவரது திறனாய்வுக் கட்டுரைகளை அனைவரும் விரும்பிப் படிக்கலாம்.

**- வசந்தபாரதி**



# மலையேறி... எங்கலாம்!

மலைவாச ஸ்தலம் என்பதைக் குறிக்கும் ஹில்-ஸ்டேஷன் என்ற வார்த்தை ஆசியாவில் தான் பயன்படுத்தப்படுகிறது. முக்கியமாக இந்தியாவில்தான் இந்த வார்த்தையை அதிகமாகப் பயன் படுத்துகிறோம். ஹில்-ஸ்டேஷன் என்பது என்ன? வெப்பம் குறைவாக உள்ள பகுதிகளில் - உயரமான குன்றுப் பகுதிகளில் - உருவான சிறு நகரங்கள்தான் அவை. இந்தியாவில் உள்ள ஹில்-ஸ்டேஷன் கள் பெரும்பாலும் பிரிட்டிஷ்காரர்களால் உருவாக்கப்பட்டவைதான்.

ஹில்-ஸ்டேஷன்கள் பொதுவாக ஆயிரம் மீட்டருக்கும் அதிகமான உயரத்தில் உள்ளவை. கோடையில் சென்று தங்குவது உடலுக்கு நன்மைதான். இதை இப்படியும் வைத்துக் கொள்ள லாம். குறைந்த பட்சம் கடுமையான வெப்பம் என்கிற தீமையிலிருந்து தப்பிக்கிறோம் என்கிற அளவிலாவது நன்மை.

கோடைக்காக ஹில்-ஸ்டேஷனில் சில நாட்கள் தங்கினால் சும்மா இருக்காதீர் கள். காலை வேளைகளில் கொஞ்சமாவது மலையேற்றம் (trekking) மற்றும் மலை ஓட்டம் (hill sprint) செய்யுங் கள்.

சமதரையில் ஓடுவதை விட, வேகமாக மலை யேறுவதினால்

ன்னென்ன நன்மைகள்?

சாய்வுப் பகுதியில் ஓடுவதால், கால்களி னால் மிக அதிக உச்ச வேகத்தில் ஓட முடியாது. னவே உங்கள் தசைகள் ஒருவிதத்தில் பாதுகாக்கப் படுகின்றன. அதேசமயம், உங்கள் பின்புறத் தசைகள் (கீழ் முதுகு, ஆடுகால் போன்றவை) மிகவும் உறுதிப்படுகின்றன.

சாய்வுப் பகுதியில் ஓடுவதால், நீங்கள் முன்புறமாகக் குனிந்தபடியே தான் ஓடுவீர்கள். உங்களையும் அறியாமல் எந்தப் பகுதிகளில் உடலை எப்படி வைத்தபடி ஓடவேண்டும் என்பதில் பயிற்சி பெறுகிறீர்கள். வெறும் சம தரையில் மட்டும் ஓடும்போது, இந்த ஞானம் கிடைப்பதில்லை.

மலைப் பகுதியில் ஓடும்போது, உங்கள் கைகளும் தோளும் இணைந்து அதிக வலிமையுடன் செயல்படுகின்றன. இதன் மூலம் கைகள், தோள், கால் ஆகியவற்றுக்கிடையேயான ஒருங்கிணைப்பு அற்புதமாக உண்டாகிறது. மலையேற் றத்திற்குப் பிறகு சமதரைப் பகுதியில் ஓடும்போதும், அந்தப் பயிற்சி உங்களுக்கு ஒருங்கிணைப்புக்கு மிகவும் உதவும்.

மலைப் பகுதி ஓட்டத்தின்போது குறைந்த தூரம் ஓடினாலேயே, அதிக கலோரிகளை எரிக்க முடியும்.

முக்கியமாக இயற்கைப் பகுதி என்பதால், சுற்றிலும் உள்ள தாவரங்கள் அளிக்கும் பிராணவாயுவும், காற்றில் நிலவும் கலப்படமற்ற தூய்மையும் உடலுக்கு நிச்சயம் நல்லது.

தொடர்ந்து மலையேற்றம் மற்றும் மலையோட்டம் செய்பவர்களின் உடலைக் கவனியுங்கள். நன்கு உருண்டு திரண்டிருக்கும். தொடர்ந்து ஜிம் செல்பவர்கள் மற்றும் எடை தூக்கும் பயிற்சி செய்பவர்களின் உடலைப்போல உறுதி மிக்கதாக இருக்கும்.

இதயநோய் போன்ற பாதிப்புகள் உள்ளவர்கள், மருத்துவர்களைக் கலந்தாலோசித்த பிறகே மலையேற்றம் மற்றும் மலை ஓட்டத்தில் பங்குகொள்ள வேண்டும்.

சிரமம் பார்க்காம உழைச்சா சாதனை சிகரம் தொடலாம் என்ற வாழ்க்கைப் பாடத்தை மௌனமாகச் சொல்கின்றன மலைகள்!



'ரெண்டு கண்ணும் சுத்தமா மங்கிருச்சு தம்பி! கடைத் தெருவுக்குப் போறப்போ பஸ்ஸுக்காரன் மோதியிருப்பான். தப்பிச்சதே பெரும்பாடாப் போச்சு. இனிமேயும் ஆபரேஷன் பண்ணாம முடியாது. மெட்ராஸ்ல எங்கயோ முகாம் நடத்தறாங்கன்னு சொன்னீங்களே! வார சனிக்கெழமை வந்தா சரியா இருக்குமா?'

ஜானகியம்மாள் அப்படிக் கேட்ட போது, வேணுகோபாலால் மறுக்க முடியவில்லை. பொதுத் தொலைபேசியில் விட்டுவிட்டுக் கேட்ட குரல் கூடுதல் பரிதாபத்தைக் கிளப்பியிருந்தது. 'என்னம்மா இப்பிடி கேட்டுட்டீங்க! எப்ப வேணும்னாலும் வாங்கம்மா!' என்று சொல்லிவிட்டான்.

வீட்டுக்கு வந்து

# எலி

தகவலைச் சொன்னதும், சுசீலா பொரிந்து தள்ளிவிட்டாள். 'என்னத்துக்கு வரச் சொன்னீங்க? ஏன் அவங்களுக்கு புள்ளைங்க இல்லியாமா? நம்ம வீட்ல வந்துதான் கண் ஆபரேஷன் செய்யணுமா? சரி. அப்பிடியே நாம பாத்துக்கறோம்னு வச்சுக்கங்க. உங்களுக்கு நேரம் இருக்கா? உங்க ஆபீஸ்ல லீவு குடுப்பாங்களா?' ... தொடர்ந்தன கேள்விகள்.

'பாத்துக்கலாம்!' என்று ஒற்றை வார்த்தையில் சொல்லிவிட்டான் வேணு. இத்தனைக்கும் ஜானகியம்மாள் அவர்களுக்கு ஒன்றும் அந்நியமில்லை. வேணுவின் மாமியார். சுசீலாவின் தாய்.

எம்.எம்.டி.ஏ. பஸ் ஸ்டாப்பில், அந்த அதிகாலை நான்கு மணி பஸ்ஸில் இருந்து தட்டுத் தடுமாறித்தான் இறங்கினாள் ஜானகியம்மாள். முதுமை. உடம்பு ரொம்பத் தளர்ந்து போயிருந்தது. ஓர் ஆள் சுமக்க முடியாத அளவுக்கு சுமை. கண்டக்டர் மூன்று பெரிய கட்டைப் பைகளை கீழே இறக்கி வைத்தார். பஸ் 'விருட்'டென்று கிளம்பிப் போனது.

'வாங்கம்மா!' என்ற வேணுவின் குரல் கேட்டு, சந்தோஷமாகச் சிரித்தாள் ஜானகியம்மாள்.

'தம்பி வந்துட்டீங்களா?'

'என்னத்துக்கும்மா இவ்ளோ சுமையைத் தூக்கிட்டு வந்தீங்க?'

'சுசீலாவுக்குப் பிடிக்கும் தம்பி!'

எல்லாவற்றுக்கும் சிரிப்பு. எப்படித்தான் இந்த கிராமத்து மனிதர்களால் இப்படிச் சிரிக்க முடிகிறதோ! மாங்காய், வாழைத் தண்டு, வெள்ளரிக்காய், வாழைக்காய், பச்சைப் பயிறு, கொண்டைக் கடலை, பெரிய கறிவேப்பிலைக் கொத்து...

'என்னா தம்பி! இங்கல்லாம் கருவேப்பிலைக்குக்கூட காசு வாங்குறாங்களாமே!'

வேணுகோபாலுக்கு பதில் சொல்ல நேரமில்லை. அவன் ஆட்டோ தேடிக் கொண்டிருந்தான். இன்றைக்கெல்லாம் சென்னையில் நூறடி தூரம் போவதற்குக் கூட குறைந்த பட்சம் நாற்பது ரூபாய் கேட்கிறார்கள் ஆட்டோக்காரர்கள். விலைவாசி அப்படி.

'ஏம்மா! நாளைக்கு ஞாயித்துக் கெழமை! டெஸ்டுக்குப் போகணும். கரெக்ட்டா சனிக்கிழமை வர்றியே! ரெண்டு நாள் முன்னாடி வரக்கூடாதா?' என்று கேட்டாள் சுசீலா.

'தம்பிக்கு ஆயிரத்தெட்டு வேலை இருக்கும். நான் வந்து ஏன் தொல்லை பண்ணணும்னுதான்...'

ஜானகியம்மாள் தொல்லையில்லை.

பாலு சத்யா

பெரிய உதவி. நாசுக்குத் தெரிந்தவள். வந்து இருந்த ஒரு நாளில், சுசீலாவின் வீட்டு வேலை பாதிக்காமல் குழந்தையைத் தூக்கி வைத்துக் கொண்டாள். குழந்தை தூங்குகிற இடைவெளியில், மாங்காய் ஊறுகாய் போடும் பக்குவத்தை சுசீலாவுக்குச் சொல்லிக் கொடுத்தாள். 'ஒதம்' விழுந்து அலறியழுத குழந்தையை, பக்கத்து வீட்டுப் பெரியம்மாளுடன் சேர்ந்து, வேட்டியில் உருட்டிச் சரி செய்தாள். கொடியில் காய்ந்த துணிகளை சுசீலா எடுத்து வந்து போட்ட போது, பிசிறில்லாமல் மடித்து வைத்தாள். யாருக்கும் தெரியாமல் சிறுவாடு சேர்த்து வைத்திருந்த முந்நூற்றி ஐம்பது ரூபாயை, சுசீலா தனியாக இருந்தபோது கொடுத்தாள். கண் தெரியவில்லையே தவிர, புத்தி கூர்மையாக இருந்தது.

ஜானகியம்மாளுக்கு மூன்று மகன்கள். இரண்டுபேர் தஞ்சாவூரில் மளிகைக்






கடை வைத்திருந்தார்கள். ஒரு மகன் மட்டும் சென்னையில். யாரோடும் ஒட்டாமல், மெயின் ரோட்டிலிருந்து விலகி இருந்த ஒரு கிராமத்தில், தன் கணவரோடு தனியாக இருந்தாள் ஜானகியம்மாள்.

'ஏம்மா! தஞ்சாவூர்லகூட இலவச கண் சிகிச்சை முகாம்லாம் நடக்குதே! அங்க பாக்கக்கூடாதா? கூட அண்ணனுங்க இருப்பாங்கள்ல?' என்று சுசீலா கேட்டாள்.

'என்னதான் இருந்தாலும் மெட்ராஸ் மாதிரி வருமா சுசீலா? உன் அண்ணனுங்களுக்கு ஆயிரம் சோலி. எங்களைப் பாக்க வர்றதுக்குக்கூட நேரமில்ல. அவங்களை ஏன் கஷ்டப்படுத்தணும்?'

**மே**ற்கு மாம்பலத்தில் இருந்தது அந்த அம்மன் கோயில். மாதம் ஒரு முறை அங்கேதான் 'இலவச கண் சிகிச்சை முகாம்' நடக்கும். காலை ஏழு மணிக்கே மொபெட்டில் ஜானகியம்மாளைக் கூட்டிக் கொண்டு வந்துவிட்டான் வேணுகோபால். ஆனால், அவர்களுக்கும் முன்பாகவே அறுபது வயது மதிக்கத்தக்க ஓர் ஆ வரிசையில் உட்கார்ந்திருந்தார். ஒன்பது மணிக்குத்தான் மருத்துவமனையைச் சேர்ந்தவர்கள் வந்தார்கள். அதற்குள் கணிசமா நோயாளிகள் கூட்டம் சேர்ந்துவிட்டிருந்தது. பெயர், முகவரி... எல்லா விசாரித்து ஜானகியம்மாளை பேஷண்ட் லிஸ்டில் சேர்த்துவிட்டார்கள். மருத்துவமனைக்கு பிரத்யேக வேனில் கூட்டிக் கொண்டு போய்விடுவார்களாம். கூட யாரும் வரத் தேவையில்லை என்றார்கள் மீறிப் பார்க்க வேண்டும் என்றால் ஆழ்வார்பேட்டையில் இருக்கும் ஒரு கல்யாண மண்டப முகவரியைக் கொடுத்து, மாலை ஆறு மணிக்கு வரச் சொன்னார்கள்.

'நீங்க ஒண்ணும் கவலைப்படாதீங்க தம்பி! உங்க செல் நம்பர் எனக்கு மனப்பாடம். ஏதாச்சும் ஒண்ணுன்னா... ஃபோன் பண்ணிற மாட்டேனா?'

அந்த தைரியத்தில்தான் ஆபீஸுக்கு போனான் வேணுகோபால்.

**வே**ணுகோபால் ஆபீஸும் ஆழ்வார்பேட்டையில்தான் இருந்தது. மதிய இடைவேளையில், அந்த மண்டபத்தைத் தேடிப் போனபோது, செக்யூரிட்டி வாசலிலேயே விரட்டி அடித்தார். 'அவங்கள்லாம் சாயந்தரம் ஆறு மணிக்குத்தான் வருவாங்க. அப்ப வந்து பாருங்க. இப்பவே பாக்கணும்னா, ராதாகிருஷ்ணன் ரோட்ல ஆஸ்பத்திரி இருக்கு. அங்க போய்ப் பாருங்க!'

அது இந்தியாவில் இருக்கும் பிரபலமான கண் மருத்துவமனைகளில் ஒன்று ரிஷப்ஷனில் விசாரித்தபோது, 'ஓ அதுவா? ஐ ரிசர்ச் சென்ட்டர்ல இருந்த வந்தவங்களா? பின்னாடி போங்க!

என்றார்கள்.

மருத்துவமனையோடு ஒட்டாமல் இருந்தது அந்தக் கட்டடம். ஜானகியம் மாள், கண்களில் மருந்து ஊற்றப்பட்டு, வரிசையாகக் கிடந்த நாற்காலிகளில் ஒன்றில் உட்கார்ந்திருந்தாள். வேணுவின் குரல் கேட்டதும், 'என்னா தம்பி! ஆபீஸை விட்டுட்டு வந்துட்டீங்க! ஒண்ணும் இல்ல. எனக்கு பிரஷர் இருக் காம். அதான் வெயிட் பண்ணச் சொல்லி யிருக்காங்க. என் கூட வந்தவங்களுக் கெல்லாம் இன்னிக்கே ஆபரேஷன். இதெல்லாம் பெரிய விஷயமில்ல. நீங்க ஆபீஸுக்கு போங்க! எதாச்சும் வேணும்னா உங்களைக் கூப்பிடுறேன்' என்றாள்.

வேணு மனமில்லாதவனாகக் கிளம் பிப் போனான். அன்றைக்கே ஜானகியம் மாளின் ஒரு கண்ணுக்கு ஆபரேஷன் நடந்துவிட்டிருந்தது.

அடுத்த நாள், வேணு கோபாலும் சுசீலாவும் ஆழ்வார்பேட்டை மண்டபத்தில் தங்கி யிருந்த ஜானகியம் மாளைப் பார்க்கப் போனார்கள்.

'இங்க நல்லா கவனிக் கிறாங்க தம்பி! ஒண்ணுக்கு பத்து டாக்டருங்க. மாறி மாறிப் பாக்குறாங்க. தஞ்சாவூர்லகூட இப்பிடி பாக்க மாட்டாங்க. என்னா... பணம் கட்டி ஆபரேஷன் செஞ்சுக்குறவங் களுக்கு சீக்கிரம் முடிஞ்சிடுது' என்று சொல்லிச் சிரித்தாள். 'ரமேஷ் விசாரிச் சானா?' என்று ஆர்வத்துடன் கேட் டாள். ரமேஷ், ஜானகியம்மாளின் மூத்த மகன். வடபழனியில் ஒரு ஓட்டலில் வாட்ச்மேன் வேலை. மருமகள் தேவி, ஒரு தனியார் மருத்துவமனையில் நர்ஸ். காலை ஆறு மணிக்குப் போனால், இரவு பத்து மணிக்குத்தான் வீடு திரும்ப முடியும்.

'பேசுறீங்களா?' என்ற வேணுகோபால் ரமேஷுக்கு ஃபோன் போட்டான். நாட் ரீச்சபிள். தேவி பதினைந்து நிமிடம் பேசி னாள். தன்னால் வர இயலாத நிலைமை யைச் சொன்னாள். குழந்தைகள் வந்து பார்க்கிற அளவுக்குப் பக்குவப்படவில்லை என்றாள். மூத்தவன் ஒன்பதாவது. சின்னவள் ஏழாவது படித்துக்கொண்டிருந் தாள்.

செல்ஃபோனை வைத்தவுடன் ஆயா சத்துடன் கேட்டாள் ஜானகியம்மாள். 'ஏன் தம்பி! இங்கல்லாம் லீவு குடுக்க மாட் டாங்க சரி. ஒரு மணி நேரம், ரெண்டு மணி நேரம் பெர்மிஷன்கூடவா குடுக்க மாட்டாங்க?'

ஆபரேஷன் முடிந்த மூன்றே



## வயிற்றுக்குள் ஏ.சி.!

தினமும் காலை ஒரு வேளை மட்டுமாவது பழைய சாதம் + சின்ன வெங்காயம் சாப்பிட்டு, ஒரு துண்டு வெல்லம் கடித்துத் தின்றுவிட்டால், அன்று முழுவதுமே வயிறு ஏ.சி. மாதிரி குளிர்ச்சி ஆகிவிடும். வைட்டமின் சத்துக்கள் மிகுந்த பழையது, சிலருக்குப் பித்தத்தைத் தூண்டிவிடும் என்பதால்தான், இந்த 'வெல்ல' நிவாரணம்.

- டி.வசந்தா, திண்டுக்கல்

நாட்களில், சொல்லச் சொல் லக் கேட்காமல் ஊருக்கு மூட்டையைக் கட்டிவிட்டாள்.

'இன்னும் என்னாத்துக்கு தம்பி இங்க இருக்கணும்? மருந்தெல்லாம் குடுத்திருக் காங்க. ஏதாவது பிரச் னைன்னா உடனே கௌம்பி வந்துறமாட்டேனா?'



மூணு மாசமா பணம் அனுப்பலை. பாத்து சண்டை போடலாம்னு வந்தேன். நேர்ல பாத்ததும் ஒண்ணுமே கேக்கத் தோணல. அடுத்த மாசத்துலருந்து அனுப்ப றேன்னு சொல்லியிருக்கான். அவனும் என்னதான்

**என்னா ஒண்ணு... சோதனைச்சாலையில எலியைப் போட்டு கீறுவாங்கல்ல? அதுமாதிரிதான்.**

**ப**ஸ்ஸில் ஏற்றிவிட, ஜானகியம்மாளோடு கோயம் பேடு போயிருந்தான் வேணு கோபால். அங்கே, அவளுக்கு வழித்துணைக்கு ஆள் கிடைத் திருந்தது. லட்சுமியம்மாள். கிராமத்துத் தோழி.

'என்னா லட்சுமி! நீ எப்போ வந்தே?'

'முந்தா நாள் வந்தேங்க்கா. மூத்தவன் பண்ணுவான்? ரெண்டு புள்ளைங்களை வச்சுக்கிட்டு அல்லாடிக்கிட்டு இருக்கான். பாவம்! சரி. உங்க கண் ஆபரேஷன் முடிஞ்சிடுச்சா?...'

இப்போ ஒரு கண்ணு பளிச்சுனு இருக்கு. ரொம்ப நல்லா கவனிக்கிறாங்க லட்சுமி. நம்ம ஊர்ல காமிக்கிறது எல்லாம் வேஸ்ட். எத்தினி டாக்டருங்க? என்ன மாதிரி சாப்பாடு, டிபன் தெரியுமா...' என்று புராணத்தை ஆரம்பித் திருந்தாள் ஜானகியம்மாள்.

வேணுகோபால் ஓரடி நடந்து வேறு பக்கம் திரும்பினான். அப்போதும் ஜானகி யம்மாள் பேசிக்கொண்டிருந்தாள். கொஞ் சம் அமர்ந்த குரலில் சொன்னாலும், அது வேணுவுக்குக் கேட்டது.

'என்னா ஒண்ணு... சோதனைச் சாலை யில எலியைப் போட்டு கீறுவாங்கல்ல? அது மாதிரிதான் இங்கேயும். வர்றவங்க போறவங்கல்லாம் நம்ம கண்ணை அழுத்தி, விரிச்சுப் பாப்பாங்க. அவ் வளவுதான். பயிற்சி டாக்டருங்களாம்... அத பொறுத்துக்கிட்டா போதும்'

தஞ்சாவூர் பஸ் உள்ளே வர, சீட் பிடிப்பதற்காக வேணு ஓடினான்.

''இவர்தான் மன்னரின் பொய்க் காப்பாளர்.''

''புரியவில்லையே?''

''மன்னர் சொல்லும் பொய்யை எல்லாம் சமாளிப்பது இவரின் வேலை!''

- எம்.அசோக்ராஜா



## வெயில்

### டாக்டர்ஸ் சாய்ஸ்!

"பச்சை நிறமே பச்சை நிறமே' என்று மணிரத்னம் பாடலை மனசு பாட ஆரம்பிச்சுடும்ங்க. இதன் மகத்துவம் தெரிஞ்சா... தேடி ஓட வேணாம். வீட்டுத் தொட்டியிலேயே வளர்க்கலாம். எல்லாத் தாவரங்களும் மண்ணை விட்டு வெளியே வந்தா காலி. இது மட்டும் காற்றிலிருக்கும் ஈரத்தை உறிஞ்சியே ஐந்து வருடம் கூட உயிரா இருக்கும். அதனால, பல குடும்பங்கள் வாசலில் இதைக் கட்டி வைப்பாங்க. இது வளர வளர குடும்பமும் செழிப்பா வளரும்'' என்று பெரும் பீடிகையோடு விளக்க ஆரம்பித்தார் கோபிசெட்டிபாளையத்தைச் சேர்ந்த இயற்கை வைத்தியர் எம்.முத்துக்குமார். அவர் சொன்னது 'குமரிக் கற்றாழை' எனச் செல்லமாய் அழைக்கப்படும் சோற்றுக்கற்றாழையைத்தான்.

''இது உடல் வெப்பத்தை சமன் செய்து செல்களின் வளர்ச்சியைத் தூண்டி, நோய் எதிர்ப்புச் சக்தியைத் தருகிறது. சர்க்கரையின் அளவைக் கட்டுப்படுத்துது. அலோபதி மருந்துகளால் வந்த விஷத்தன்மையை உடலிலிருந்து நீக்கும். கற்றாழைக்குள் இருக்கும் வெண்மையான பகுதியை எடுத்துச் சாறாக்கி, நாட்டுச் சர்க்கரையுடன் சேர்த்துச் சாப்பிட்டா, நான் சொன்ன எல்லாத்தையும் சரிகட்டிடும். வெயிலுக்கு ஏற்ற விசேஷ குளிர்பானம் இதுதாங்க. சென்னை



யில் பல இடங்களில் மோர், டீ மாதிரி இதை விற்க ஆரம்பிச்சுட்டாங்க'' என்று கற்றாழை புராணம் பாடி முடித்தா[ர்] இயற்கை வைத்தியர்.

### கைவைத்திய குவீன்!

டாக்டர் சொல்றது சரி... ஆனாலும் பிராக்டிகலா செஞ்சு பார்த்து சாப்பிட்டவங்களைக் கேட்டா இன்னும் நல்லா இருக்குமேன்னு திருப்பூரில் வசிக்கு[ம்] குடும்பத் தலைவி கலாதேவியைக் கேட்டோம்...

''எனக்கு நாலு பேரக் குழந்தைங்க[ள்] யாருக்கு காய்ச்சல் வந்தாலும் கற்றாழை வேரை இடித்து சாறெடுத்து பனங்கற்கண்டைச் சேர்த்து மூன்று நாட்களுக்கு மூன்று வேளை கொடுப்பேன். காய்ச்சல் போயே போச்சு. தீப்பட்ட புண்ணா? கை

# கவசம்



லையே வேண்டாம். கற்றாழை சோற்றை எடுத்து சூடாக்கிப் புண்ணின் மேல் கட்டினா, இருந்த இடம் தெரியாம புண் மாயமாகிடும். கற்றாழைப் பூவை வெங்காயம் சேர்த்துப் பொரியல் செஞ்சு சாப்பிட்டா சுகர் கன்ட்ரோலில் இருக்கும். எவ்வளவு வெயிலா இருந்தாலும், ஈடு கொடுத்து வளரும் கற்றாழையை நான் மொட்டை மாடி முழுக்க வளர்க்கிறேன் - ஒட்டுமொத்த ஹெல்த்துக்கும் கற்றாழை ஜூஸ்தான் கேரண்டி'' என்கிறார்.

## ஆல் இன் ஆல் அழகு ராணி!

''ஆலோவேரா நூறு சதம் ஒரு பர்ஃபெக்ட்டான ஆல் இன் ஆல் அழகு சாதனப் பொருள். வெயில் கவசம் வேறு...'' என்கிறார் மகளிர் அழகு நிலையக் கலைஞர் கே.சுதா.

''வெயில்ல வளரும் ஆலோவேரா தான், வெயிலில் கருக்கும் நமது சருமத்தைப் பாதுகாக்குது. அதுக்கு ஆலோவேரா சன் ஸ்கிரீன் லோஷன் நல்ல பலன் தரும். சுருக்கங்களைப் போக்கி இளமையா வைத்துக் கொள்ள உதவுங்க. கொளுத்துற வெயிலிலும் உடம்பு குளுகுளுன்னு இருக்க, கருக்காம மிளிர, வாட்டும் கோடையில் வாடாம இருக்க, கற்றாழை சோற்றுடன் வெந்தயம் சேர்த்துக் காய்ச்சப்படும் தேங்காய் எண்ணெயை வீட்டில் இருக்கும்போது உடம்புல மசாஜ் மாதிரி தடவிக்கிட்டாலே போதும். பியூட்டி பார்லரே வேண்டாம். என்றென்றும் அழகியா இருக்க, அதிக உதிரப்போக்கு கட்டுப்பட, வெள்ளைப்படுதலை ஒழிக்க, தேன் கலந்த கற்றாழை ஜூஸ் போதும்'' - என்று அவர் சொன்னபின், வீட்டில் கற்றாழை இருந்தால் போதும்; கோடைக் கதிரவனையும் வீட்டிலேயேம் குடியிருக்க வைச்சிடலாம் கொஞ்சமும் பயமின்றி, என்றே தோன்றுகிறது.

- ஆர்.பாலா

• கலாதேவி



• எம்.முத்துக்குமார்



• கே.சுதா



# ஒரு விடியலின் விதை!

✱ செந்தில் கோபாலன்

**அ**ஞ்சு வருஷம் ஆவுது. சேது ரெத்தினம் அய்யா காட்ல அஸ்தி வாரம் போட்டாங்க. அதுல நானும் ஒரு சித்தாளா போனேன். 'சின்ன வயசு ஆளு ஒருத்தரு ஆஸ்பத்திரி கட்றாரு. சுத்து வட்டார சனங் களுக்காக. எல்லாத்துக்கும் இலவச மருத்துவம் அப்பிடினு சொன் னாங்க. கிராமத்து சனங்க எல்லா ரும் ரொம்பவே ஆச்சர்யப்பட் டாங்க. அதும் பின்னாடி இந்த எடத்துல ஒவ்வொரு கட்டடமா எழும்பத் தொடங்கிச்சு!'' என்கிறார் தேனூர் கிராமத்தின் மல்லிகா.

பெரம்பலூர் மாவட்டம், தேனூர் கிராமம். புன்னை மர மொன்றில் தொங்கிக் கொண் டிருக்கிறது, தேனூர் கிராம மருத்துவமனை போர்டு. அது வழியே செல்கிறோம். பழங்கால பாணியில் கட்டப்பட்டுள்ளது, மருத்துவமனைக் கட்டடம். மருத்துவமனை, பாலர் மற்றும் அடிப்படைக் கல்விப் பள்ளி, கணினி மையம், இ.லோ்னிங் ஸ்கூல், பி.பீ.ஓ. சென்டர் மற்றும் விளையாட்டுத் திடல் என வியக்க வைக்கிறது பயிர் அறக்கட்டளை. காற்றோட்டமும் வெளிச்சமும் இயல்பாகப் பரவும்வண்ணம் வடி வமைக்கப்பட்டுள்ளது ஒவ்வொரு கட்டடமும்.

ஐந்து வ்ருடங்களுக்கு முன்பு வரை, அமெரிக்காவில் மாதம்

நான்கு லட்ச ரூபாய் ஊதியம் பெற்றவர். அதிலிருந்து விலகி வந்து, தேனூர் கிராமத்தில் நிரந்தரமாகத் தங்கியுள்ளார். ஆரவாரம் ஏதுமில்லை. கிராமப்புற ஏழை எளிய மக்களுக்காக தம் வாழ்க்கையையே அர்ப்பணித்து, சேவை செய்து வருகிறார் செந்தில் கோபாலன்.



''தொட்டியபட்டியில அஞ்சாங் கிளாஸ் வரைக்கும் இருக்கு. நாப்பத்தைஞ்சு புள்ளைகளுக்கு டெய்லி காலம்பற டிபன் தந்து வருது பயிர் ட்ரஸ்ட்டு. செங்கசூளையில வேலை பார்த்த பொண்ணுக்கு, புத்தி மாறாட்டம் போல ஆய்டுச்சு. துணிமணிய கிழிச்சுக்கிட்டு சுத்த ஆரம்பிச்சா. இந்தத் தம்பிதான் திருச்சியில மனநல ஆஸ்பத்திரியில ரெண்டு மாசம் அவள தங்க வெச்சது. இப்ப அவ செங்கசூளை வேலைக்குப் போய் வர்றா!'' என்கிறார் கிராமத்தின் சிவபாக்கியம்.



நாம் சென்றிருந்த சமயம் இ.லேர்னிங் வகுப்பு. ஆறு வயது முதல் பதினைந்து வயது வரையிலான பிள்ளைகள். வீடியோ கான்பரன்சிங் வாயிலாக அவர்கள் பயின்று கொண்டிருந்தனர். கல்வியாளர்கள், பிள்ளைகளின் கேள்விகளுக்குப் பதிலளித்து வகுப்பு நடத்திக் கொண்டிருந்தனர். அமெரிக்கா மற்றும் வெளிநாடுகளிலிருந்தும் கல்வியாளர்கள் இதில் பங்கேற்கின்றனர். அன்றைய வகுப்பில் பெங்களூரிலிருந்து சதீஷ் என்பவர், தேனூர் கிராமத்துப் பிள்ளைகளுடன் உரையாடிக் கொண்டிருந்தார்.

மூன்று மாதக் குழந்தையாக இருந்த போது போலியோவால் பாதிக்கப்பட்ட பெண் ஜனனி. தொட்டியபட்டி கிராமம். ''ப்ளஸ் டூ முடிச்சிட்டு கம்ப்யூட்டர் கத்துக்கிட்டேன். பி.பி.ஓ. சென்டர்ல வேலை செய்றேன். அஞ்சு பேர் வேலை செய்றோம். பின்தங்கிய கிராமம் ஒண்ணுல இதெல்லாம் நெனைச்சு பார்க்க முடியாதது. கிராமத்து படித்த இளம் பெண்களுக்கு பி.பி.ஓ. பயிற்சி தர்றோம். இதுவரைக்கும் இங்கன இருவது பெண்கள் இலவசப் பயிற்சி எடுத்துக்கிட்டு, வெளியூர்ல வேலை செய்றாங்க!'' என்



கிறார் ஜனனி.

**ப**யிர் அறக்கட்டளை வாயிலாக தேனூர், தொட்டிய பட்டி, நத்தக்காடு, கண்ணப் பாடி, வரதராஜபுரம் ஆகிய கிராமங்கள் பயன்பெற்று வரு கின்றன. மேலும் சுற்றுவட் டாரக் கிராமங்களுக்கும் தங் கள் சேவையை விரிவுபடுத் தும் எதிர்காலத் திட்டங்களும் அதனிடம் உள்ளது.

தேனூர், தொட்டியபட்டி, நத்தக்காடு கிராமங்களின் ஊராட்சி நடுநிலை மற்றும் துவக்கப்பள்ளிகளில், அதன் ஆசிரியர்களுக்கு உதவியாக, பயிர் அறக்கட்டளை ஆசிரியர் கள் பணியாற்றி வருகின்றனர். கிராமப்புற அடிப்படைக் கல்வி வளர்ச்சி அதன் முக்கிய நோக்கம்.

''தேனூர்ல எண்ணூறு வூடுகள் இருக்கு. கழிவறை சாக்கடை வசதி இல்லாம, கழிவுநீர் அங்கங்கே தேங்கி நிக்கும். செந்தில் அண்ணன் கிராமத்துப் பசங்களை ஒண்ணு திரட்டி, அந்தக் கழிவுநீர்த் தேக்கங்களைச் சுத்தம் பண்ண வெச்சாரு. இப்பவும், வாரம் ஒரு தடவையோ இல்லாட்டி ரெண்டு வாரத்துக்கு ஒரு தபாவோ, அந்தப் பசங்க படை ஊரைச் சுத்தம் பண்ணக் கிளம்பிடும்!'' என்கிறார் தேனூர் பொன்னுதுரை.

**இ**த்தனைக்கும் விதை யென விளங்கி வரும் செந்தில் கோபாலனைச் சந் தித்தோம். ஏதோ காதல் தோல்வி போல, குறுந்தாடி யுடன் காணப்பட்டவரை, 'எப் போது திருமணம்?' எனக் கேட்டோம். ''திருமணமா? எனக்கா? நோ சான்ஸ். என் திருமண வாழ்க்கையை விட் என் நாடுதான் இப்போ முக்கி யம். எனக்கு நெறைய வேலை இருக்கு!'' என மறுத்தவர், பட்டியலிடத் தொடங்கினார்:

''தேனூருக்குப் பக்கத்துல திண்ணனூர் எங்க பூர்விக கிராமம். காந்தியம்தான் கிராம மக்களை மேம்படுத்தும் என் பது என் நம்பிக்கை. என் னோட சிந்தனை வெளிப் பட்டதும், என் பெரியப்பா சேதுரெத்தினம் தங்களோட ஆறேமுக்கால் ஏக்கர் நிலத்தை தானமாகத் தந்தார். பயிர் அறக்கட்டளை உருவானது. தேனூரைச் சுற்றிலும் உள்ள மேலும் பத்துப் பதினைஞ்சு கிராமங்களுக்கு எங்க டிரஸ்ட் டோட கல்வி மற்றும் மருத்துவ சேவை களைக் கொண்டு போகணும். தேனூர் கிராமத்தைச் சுற்றிலும் உள்ள நீர் வளங் களை மேம்படுத்தணும். கிராம மக்களை வேளாண் மற்றும் பல தொழில் சார்ந்த சுய தொழில் முனைவோரா உயர்த்தணும்!'' என்று அடுக்கினார். கோபால னின் குடும்பம் ரொம்பப் பெரிசு!

– ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு


* மல்லிகா


* ஜனனி


* பொன்னுதுரை

**திருமணமா? எனக்கா?... நோ சான்ஸ் அதை விட பெரிய கனவு இருக்கு!**

## காதில் விழுந்தவை

**செ**ன்ற கல்வியாண்டின் துவக்கத்தில் னியார் பொறியியல் கல்லூரிகள், லட்சக் ணக்கில் கேபிடேஷன் கட்டணம் வாங்கி தாக சட்டமன்றத்தில் உறுப்பினர்கள் கோபமாகப் பிரச்னை எழுப்பினார்கள். யர்கல்வித் துறை அமைச்சர் பொன்முடி இதைப் பற்றி விசாரித்து உடனடி நட வடிக்கை எடுக்க ஒரு கமிட்டி அமைத் ார். மாநில உயர் கல்வி நிறுவனத்தின் துணைத் தலைவர் ராமசாமி, உறுப்பினர் செயலர் பாஸ்கரன், சென்னை பல்கலைக் ழகத் துணைவேந்தர் ராமச்சந்திரன், அண்ணா பல்கலைக்கழகப் பேராசிரியர் ணேசன் ஆகியோர் உறுப்பினர்கள். இதோ, அடுத்த கல்வியாண்டும் வந்து விட்டது. கமிட்டி என்னவாயிற்று என்றே தெரியவில்லை. அரசுக்கு அறிக்கையும் கொடுக்கவில்லை. "இந்தக் கமிட்டி சென்று சோதனை செய்ததாகச் சொல்லப் பட்ட கல்லூரிகள் எல்லாம் தரமான கல் லூரிகள். அங்கே போய் இவர்கள் எந்த ஆவணத்தையும் கைப்பற்றவில்லை. கைப் பற்றியது வழக்கமான சுற்றறிக்கைகளைத் தான். கேப்பிடேஷன் கட்டணம் வாங்கு வதற்கு நடவடிக்கை எடுக்க ஏற்கெனவே

# கண்துடைப்புக் கமிட்டி!

சட்டம் இருக்கிறது. முறைப்படி ரசீது கொடுத்து இதை வாங்குவதில்லை. பஸ் டிக்கெட் பின்னால் சங்கேதக் குறியில் எழுதி அனுப்புபவர் கல்லூரித் தலைவர். அதை வசூல் செய்வார் கேஷியர். கமிட்டி எல்லாம் கண்துடைப்பு, ஏமாற்று வேலை. அரசாங்கம் நினைத்தால் பெற்றோரிடம் புகார் வாங்கி நடவடிக்கை எடுக்க முடி யும். ஆனால், அவர்கள் அமைதியாக இருப்பதற்குக் காரணம் தெரிந்ததுதானே" என்று சொல்கிறார்கள் ஏகத்துக்குக் கொட்டி அழுது படிக்க வைக்கும் பெற் றோர்கள்.

● ● ● ● ●

**ஸ்**டாலின், அன்பழகன், துரைமுரு கன், வீரபாண்டியார் போன்ற விரல் விட்டு எண்ணக்கூடிய சில அமைச்சர் களின் துறைகளைத் தவிர, மற்ற துறை களின் செயல்பாடுகளில் முதல்வருடைய செயலாளர்களின் தலையீடுகள் இருப்பது குறித்துப் பல ஜூனியர் அமைச்சர்கள் முணுமுணுக்கிறார்கள். "எங்களால் முதல் வரிடமும் ஏதும் சொல்ல முடியவில்லை. இப்போது சட்டமன்ற தேர்தலும் முன்கூட் டியே வருகிறது என்ற நிலையில், நாங்கள் ஏதோ பெயருக்குத்தான் அமைச்சராக இருக் கிறோம். மற்றபடி முதல்வரின், செயலர் கள்தான் சூப்பர் அமைச்சர்கள்!" என்று குமுறுகிறார் ஒரு ஜூனியர் அமைச்சர்.

**- சஞ்சயன்**





உம்மிடி பங்காரு ஜுவல்லர்ஸ் இந்த ஆண்டு அன்னையர் தினத்தை ஒட்டி ஒரு வார காலம் பிரத்யேகமான பிளாட்டினம் நகைகள் விற்பனைக்காக நடத்திய பிரஸ் மீட்டில், இதை பத்திரிகையாளர்களிடம் பகிர்ந்து கொண்டார் பூஜா. அது மட்டுமில்லாமல், 'உறவு களிலே அம்மாவைப் போல, நகைகளில் பிளாட்டினமும் ரொம்ப ஸ்பெஷல்' என்று சொல்லி, ஒரு பிளாட்டினம் பிரேஸ் லெட்டை வாங்கி அன்னையர் தினப் பரிசா கத் தன் அம்மாவுக்கு பூஜா அணிவித்தார்.

# நீ எவ்ளோ நல்ல அம்மா!

நடிகை பூஜா இருப்பது பெங்களூரு. அவருடைய அம்மா இருப்பது ஸ்ரீலங்கா. திடீ ரென்று பூஜாவிடமிருந்து அம்மாவுக்கு போன். 'என் காலில் எலும்பு முறிவு! உடனே கிளம்பி வா' என்று. பூஜா சொன்னதும் அதிர்ந்துபோய், பெண்ணைப் பார்க்க அடுத்த ஃப்ளைட் பிடித்து வந்துவிட்டார் அம்மா. வீட்டுக்கு வந்த அம்மாவுக்கு, பூஜாவைப் பார்த்ததும் எக்ஸ்ட்ரா அதிர்ச்சி! தனக்கு எலும்பு முறிவு என்று பூஜா சொன்னதெல்லாம் டூப்! குழம்பிப்போன அம்மாவை ஆசையோடு கட்டிப் பிடித்துக் கொண்டு, 'நீ எவ்ளோ நல்ல அம்மா! ஒரு தடவை யாவது கரெக்டா மதர்ஸ் டே அன்னிக்கு உனக்கு நிஜமாகவே என் அன்பைக் காட்டணும்னு தீர்மானம் பண்ணி னேன்; சின்னதா ஒரு பொய் சொன் னேன்! தட்ஸ் ஆல்!' என்றதும், அம்மா அப்படியே நெகிழ்ந்து போய் மகளைக் கட்டிக் கொண்டார்.

* ஜிதேந்திரா



* சியாமளா



வி.பி.ஜே. நிர்வாக இயக்குனரான ஜிதேந்திரா, 'எங்கள் ஷோ ரூமின் பெருமைக் குரிய வளர்ச்சியில், எங்கள் அம்மா சியாமளா வின் பங்கு மகத்தானது. 'நீங்கள் வியாபார நெளிவுசுளிவுகளை எல்லாம் கற்றுக் கொண்டு, திறமையாகக் கடையைக் கவனித்துக் கொள்கிறீர்கள். நான் இனிமேல் ரெஸ்ட் எடுத்துக் கொள் கிறேன்' என்று எங்கள் அம்மா வீட் டில் இருந்தாலும், வருகிற பல வாடிக்கையாளர்கள் கேட்கிற முதல் கேள்வி: 'அம்மா எங்கே?' என்பது தான்! தாங்க்யூ அம்மா!' என்று தன் அன்னையர் தின வாழ்த்துக் களைத் தெரிவித்தார்.

நிகழ்ச்சியில் அம்மா-பெண் இருவருமாக இங்கே நகை வாங்க வந்திருப்பவர்களுக்கு ஒரு ஸ்பெஷல் பரிசும் வழங் கப்பட்டது.

– எஸ்.சந்திரமௌலி

# நல்லதை விருத்தி செய்!



லோகம் என்று இருந்தால், அதில் எல்லாமே நல்லதாக இல்லாமல் கெட்டதும் இருக்கத்தான் செய்யும். ஸ்ருஷ்டி தோன்றிய நாளாக இப்படித்தான் இருந்து வந்திருக்கிறது. 'முடிவிலே, இந்த லோக வாழ்க்கையே - அதிலே நல்ல வாழ்க்கை என்று சொல்கிறதும் உள்படத்தான் - நிஜமில்லை; லோகாதீதமான, மாயாதீதமான ஒன்றுதான் நிஜம்; இதிலிருந்து அதற்குப் போய்ச் சேருவதுதான் நமது முடிவான லக்ஷ்யமாக இருக்க வேண்டும்' என்று நமக்குக் காட்டுவதற்காகவே ஸ்வாமி இந்த லோகத்தில் கெட்டதுகளையும் வைத்திருக்கிறார் போலிருக்கிறது.

மனுஷ்யர்களான நம்முடைய இந்த லோகத்திலோ இரண்டும் கலந்து மிச்ரமாயிருக்கும். அப்படித்தான் ஈச்வர நியதி. ஆனாலும் இதில் நல்லதைவிடக் கெட்டது ரொம்ப ஜாஸ்தியாகி விட்டால் நாம் அந்தக் கெடுதலிலேயே அழுந்தி அழுக்காகி இங்கேயிருந்து போய்ச் சேரவேண்டிய லக்ஷ்யமான நிஜத்தை அடைய முடியாமலே போய்விடும். அப்படி ஆகுமாறு விடப்படாது. பூர்வ யுகங்களிலுங்கூட நல்லதோடு கெட்டதும் இருந்தாலும் கலியில் நிலைமை மாறி, கெட்டது ஜாஸ்தியாயிருக்கும் என்றும் சாஸ்த்ரங்கள் சொல்கின்றன. அப்படிச் சொன்னதால் இங்கே முழுக்கக் கெடுதலே வியாபித்து, நல்லது விடுபட்டே போய்விடும் என்று அர்த்தமில்லை. ஏனென்றால், அப்போது 'கலப்பு லோகம்' என்ற இதன் பேரே பொய்யாகி, இது அஸுர லோகமாக அல்லவா ஆகிவிடும்? அதோடகூட, கலியின் கொடுமைக்கும் அதே சாஸ்திரங்களில் பரிஹாரம் - நிவாரணம் சொல்லியிருப்பதால், இங்கே இந்த யுகத்திலும் நல்லதற்குப் பாதியளவு இடமில்லாவிட்டாலும், நாற்பது சதவீதமாவது இடமுண்டு என்று காட்டுவதாகவே ஏற்படுகிறது. தற்காலத்தில் ஆகியிருப்பதுபோல், அந்த அளவுக்கும் கீழே நல்லது போய்விடுவதற்கு நாம் இடம் தரப்படாது. லோகம் பூராவும் இப்போது காணப்படுகிற மாதிரி, கெட்டதிலேயே மேலும் மேலும் போய் விழுந்து மீட்சியே இல்லாமலாகி விடக்கூடாது. அதற்கு நல்லதை விருத்தி செய்து, கெட்டதைக் குறைக்கவேண்டும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

வருணுக்கு அன்று கடைசி பீரியட் தமிழ். தமிழ்ப் பாடத்தில் ஹோம்-வொர்க் எதுவுமில்லை. அதனால் பாடம் சுமையாகத் தோன்ற வில்லை. தமிழாசிரியர் ஒரு செய்யுளை நடத்திவிட்டு, அதன் விளக்கவுரையை டிக்டேட் செய்தார். அதை எல்லோரும் சரியாக எழுதியிருக்கிறார்களா என்று அணித் தலைவர்களைத் திருத்தச் சொன் னார். வருண் பாரதியார் அணி. அதன் தலைவர் ராஜேஷ். ராஜேஷும், வருணும் நெருங்கிய சிநேகிதர்கள். வருணுக்குப் பின்னாலுள்ள பெஞ்சில் ராஜேஷ் இருந் தான்.

கிருஷ்ணையா, காலையில் வகுப்புகள் ஆரம்பிப்பதற்கு முன்பே, ஸ்கூல் கிரௌண்டில் வைத்து, தன் பையில் நோட்டுப் புத்தகங்களுக்கு நடுவே வைத் திருந்த சிறிய காகிதப் பட்டத்தை எடுத்துக் காண்பித்தான். அது ரொம்ப அழகாக இருந்தது. 'சாயந்திரம் பட்டம் விடப் போகிறேன்' என்று அவனிடம் பீற்றிக் கொண்டான். அவனுக்கும் பட்டம் விட ஆசைதான். ஆனால், புதுப் பட்டம் வாங் கக் காசு வேண்டுமே? வீட்டில் அம்மா உள்பட யாரிடம் கேட்டாலும் காசு கிடைக்காது. 'உனக்கு எதற்குக் காசு' என்று கேட்பார்கள். ஆச்சி, அப்படி யில்லை. ஆச்சியிடம் காசு இருந்தால், அவன் கேட்டதுமே கொடுத்து விடுவாள். அப்பா, அம்மா, தாத்தாவிடமெல்லாம் காசு புழங்குகிற மாதிரி ஆச்சியிடம் காசு புழங்குவதில்லை.

பிரேயருக்கு முதல் மணி அடிப்பதற்கு முன்பு, ராஜேஷிடம், கிருஷ்ணையா வைத்திருக் கிற பட்டத்தைப் பற்றிச் சொன்னான். ராஜேஷிடம் எப்போதும் பாக்கெட் மனி இருக்கும். அவனால் பட்டம், பம்பரம், கிரிக் கெட் மட்டை, பந்து இவற்றை வாங்குவதெல் லாம் வெகு எளிது. என் றாலும், அவனிடம் தன் ஆசையை வெளியிட வருண் தயங்கினான். இய

# உள்ளும் புறமும்





வண்ணநிலவன்

லாத பிள்ளைகளின் மனத்தில் ஏற்படும் க்கம் வருணுக்கு ஏற்பட்டது.

அப்பா கதைப் புத்தகங்களாகத்தான் வாங்கிக் கொடுக்கிறார். அம்மாவிடம் ராம்ப நாள் கேட்டுத் தொந்திரவு செய்த பின்பு, அவனுக்குப் பிடித்தமான 'டிரேடர்' விளையாட்டு வாங்கிக் கொடுத்தாள். ஆனால், ஞாயிற்றுக்கிழமை ஹோம்-வொர்க் இல்லாவிட்டால்தான், அதுவும் யார் வீட்டுக்கும் எடுத்துச் செல்லாமல், வீட்டில் வைத்தேதான் விளையாட வேண்டும் என்று சொல்லி விட்டாள். விளையாட்டு என்பது, தடையில்லாத மனதுடன், சர்வசுதந்திரத்தோடு விளையாட வேண்டியது என்பது அம்மாவுக்குத் தெரியாதா என்ன? அம்மாவின் மீது எரிச்சலாக வந்தது.

இப்போது வருணுக்கு டிரேடர் விளையாட்டு அலுத்து விட்டது.



நல்லவேளையாக ராஜேஷ் வீட்டில் கம்ப்யூட்டர் இருந்தது. அதில் ராஜேஷ் விளையாடும்போது, வருண் பக்கத்தில் உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருப்பான். அவனுக்கும் ராஜேஷ் விளையாட இடம்தருவான். ஆனால், ராஜேஷ் மாதிரி அவனால் கார் சேஸிங் விளையாட முடியவில்லை. அவனது கார் அடிக்கடி ரோட்டை விட்டு வெளியே சென்று விடும். ராஜேஷ் அவன் தலையில் செல்லமாகக் கொட்டுவான்.

கிருஷ்ணையாவுடைய பட்டத்தைப் பார்த்த பிறகு, வருணுக்கு அதே ஞாபகமாக இருந்தது. அந்த மாதிரி ஒரு பட்டம் மிக உயரத்தில் காற்றில் பறந்தால் எவ்வளவு சந்தோஷமாக இருக்கும். அம்மாவிடம் பட்டம் வாங்கப் பணம் கேட்க வேண்டும் என்று முடிவு செய்தான். அம்மா சத்தம் போட்டாலும் போடுவாள். பிறகு என்னதான் செய்வது?

ஆனால், இன்டர்வெல்லில் ராஜேஷும், மணிகண்டனும், அன்று சாயந்திரம் எப்படியாவது பட்டம் வாங்கி விட வேண்டும் என்று பேசிக் கொண்டார்கள். மணிகண்டன் வீட்டினருகேவும் பட்டம் விட ஆரம்பித்து விட்டார்களாம். அவன்தான் பட்டம் விடுகிற பேச்சை ஆரம்பித்தவன். வருணுக்கு இது ரொம்ப வசதியாகப் போய்விட்டது.

பட்டம் விடுவது பற்றி ஏதாவது முடிவு தெரியும் என்று நினைத்தான். அவன் நினைத்த மாதிரியே நடந்தது. ராஜேஷ், அவனே கல்பனா ஸ்டோரில் போய் பட்டத்தை வாங்கி விடுகிறேன் என்றான். விஷயம் இவ்வளவு சுலபமாக முடியுமென்று அவன் எதிர்பார்க்கவே இல்லை. ராஜேஷ் மாதிரி ஒருத்தன் இருப்பது எவ்வளவு வசதியாக இருக்கிறது.

என்னதான் ராஜேஷ் நெருங்கிய ஸ்நேகிதன் என்றாலும், ராஜேஷின் தய வில் தன்னுடைய விளையாட்டு ஆசைகளைத் தீர்த்துக் கொள்வது அவனுக்கு சங்கோஜமாக இருந்தது. இனம்புரியாத தாழ்வுணர்ச்சி ஏற்பட்டது.

''எங்கேடா போய் விடறது?'' என்று கேட்டான் மணிகண்டன்.

''குளத்தாங்கரைப் பக்கம் போகலாமாடா...'' என்றான் ராஜேஷ். குளத்துப் பக்கம் போய் விளையாடுவதென்றால் அம்மாவிடம் அனுமதி பெறவேண்டும். அம்மா என்ன சொல்வாளோ? தாத்தாவும் கூட சில நேரம் அங்கேயெல்லாம் போகக் கூடாது என்று சொல்வார்.

**இ**ளநுங்குகளை உரித்து மிக்ஸியில் போட்டு அரைத்து, அதில் சுண்டக்காய்ச்சிய பாலும், சர்க்கரையும், ஏலப்பொடியும் சேர்த்துக் கலக்கி, ஃப்ரிஜ்ஜில் வைத்து விடவும். அரை மணி நேரத்துக்குப் பிறகு சாப்பிட்டுப் பாருங்கள். சுவையாக இருக்கும். கோடைக் காலத்துக்கு மிகவும் நல்லது.

- இராம.பார்த்திபன், வயலூர்.

''குளத்துப் பக்கம் போறதுன்னா எங்க வீட்டிலே சத்தம் போடுவாங்கடா'' என்றான் வருண்.

''உசரமான இடமா இருந்தாத்தான் நல்லா காத்து வீசும்'' என்றான் மணிகண்டன்.

''உசரத்துக்கு எங்கேடா போறது? சரி... நூல் வேணுமேடா... நூல் புதுசா வாங்கினா, மெழுகு ஏத்த வேண்டாமாடா?'' என்று கேட்டான் ராஜேஷ்.

''என்கிட்டே நூல் இருக்குடா... ஒண்ணும் பிரச்னை இல்லேடா...'' என்றான் மணிகண்டன். ராஜேஷ், வருண் இருவருக்குமே சந்தோஷமாக இருந்தது.

''ஆனால், இன்ஸிக்குக் காத்து அவ்

வளவா இல்லாத மாதிரி இருக்குதுடா...'' என்றான் ராஜேஷ்.

''சாயந்தரம்தானேடா பட்டம் விடப் போறோம். அப்ப பார்த்துக்கலாம்டா...'' என்று, எதற்கும் கவலையே இல்லாதவன் மாதிரி சொன்னான் மணிகண்டன். வருணுக்கு, தன் வீட்டு மொட்டை மாடியிலேயே பட்டம் விடலாமே என்று தோன்றியது. தன் வீட்டு மாடியில் பட்டம் விட்டால், அவர்களோடு விளையாடுவது பற்றி அம்மா எதுவும் சொல்ல மாட்டாள் என்று நம்பினான் வருண்.

''எங்க வீட்டு மொட்டை மாடியிலேயே பட்டம் விடலாம்டா...'' என்றான் வருண்.

''உங்க வீட்டு மொட்டை மாடி என்ன




அம்புட்டு உசரமாடா?''

''அதுக்கில்லேடா... நானும் உங்ககூட பட்டம் விட வரலாம்டா... அதுக்குத் தான்டா சொல்றேன்...''

''ஆமாண்டா... பாவம்டா... அவங்க அம்மா வருணை வெளியிலே எங்கேயும் விளையாட விட மாட்டாங்க'' என்று வருணுக்காகப் பரிந்து பேசினான் ராஜேஷ். மணிகண்டன் சரியென்று தலையை ஆட்டினான். வருணின் வீட்டுக்கு ராஜேஷும், மணிகண்டனும் பட்டத்துடனும் நூலுடனும் போவதென்று முடிவு செய்தனர்.

சீக்கிரம் பள்ளிக்கூடம் முடிந்து வீட்டுக்குப் போக மாட்டோமா என்றிருந்தது வருணுக்கு. அவனுடைய கவனம் பூராவும் மணிச் சத்தத்தைக் கேட்பதிலேயே குவிந்திருந்தது. ராஜேஷ் அவனுடைய நோட்டைத் திருத்தி, அவனிடம் கொடுத்தான். அதை யந்திரம் போல் வாங்கிப் பையில் வைத்தான். பள்ளிக் கூடம் விட்டதும், ராஜேஷிடம் கூடச் சொல்லாமல் பையை முதுகின் மீது போட்டுக் கொண்டு, படியிறங்கி ஓடினான். முப்பத்தி இரண்டு படிகள். தினசரி அந்தப் படிகளில் ஏறியிறங்கி, அவற்றின் மீது அவனுக்கு ஒரு அன்னியோன்யமே ஏற்பட்டிருந்தது. ஏழெட்டுப் படிகள்தான் இறங்கியிருப்பான். ஓடிய வேகத்தில் நிதானமிழந்து படி மாற்றிக் கால் வைத்து விட்டான். நிலை தடுமாறி கீழே விழுந்தான். கால் மேலாகவும் தலை கீழாகவும் சரிந்தான். எல்லாம் தலைகீழாகத் தெரிந்தது. கையை ஊன்ற முயன்றான். பின்னால் வந்து கொண்டிருந்த மாணவர்கள் அவன் மீது கும்பலாகச் சரிந்தனர். ஏதேதோ குரல்கள். யார் யாரோ மிதித்தனர். 'டேய்... டேய்' என்று சத்தம் போட முயன்றான்.

நொடிப் பொழுதில் அவன் கீழே வந்து கிடந்தான். கன்னம், தலை, கை-கால்களில் காயம். இடது கை கடுமையாக வலித்தது. பை ஒரு பக்கம் கிடந்தது. பயத்தில், தொண்டைக்குழியில் ஏதோ அடைத்துக் கொண்டிருப்பதைப் போலிருந்தது. உடம்பெல்லாம் நடுங்கிற்று. மூச்சு வாங்கிற்று. இடதுகையை ஊன்றி எழுந்திருக்க முயன்றான். இடதுகை கழன்று விட்டது போலிருந்தது. கைவீங்கிக் கொண்டு வந்தது. சுதர்சன், அவன் பையைத் தூக்கி, அவனருகில் வைத்தான். எல்லோரும் அவனைச் சுற்றி நின்று, தூக்கி விட்டனர். 'அம்மா... அப்பா' என்று முனங்கினான்.

கோபால் சார்

வந்து விட்டார். விசாரித்தார். ஆளாளுக்கு ஒவ்வொன்றைக் கூறினர். வருணுக்கு வியர்த்துக் கொட்டியது. குனிந்து பையைத் தூக்க முயன்றான். முடியவில்லை. கோபால் சார் அவன் கை-கால்களைப் பார்த்தார். சிராய்ப்புகளிலிருந்து ரத்தம் கசிந்து கொண்டிருந்தது. அவர் அவன் கையைப் பிடித்து மெதுவாக அழைத்துச் செல்ல முயன்றார். வருண் அவர் கையைத் தள்ளி விட்டான். ''ரொம்பக் கைவலிக்குது சார்...'' என்றான். அப்போதுதான் கையைக் கவனித்தார். கை வீங்கியிருந்தது.



அதற்குள் ராஜேஷ் வந்து விட்டான். ''என்னடா ஆச்சு?'' என்று அவன் தோளைத் தொட்டுக் கேட்டான். வருணுடைய பையை எடுத்துக் கொண்டான்.

''டேய்... இவனுக்குப் ப்ராக்சர் ஆகியிருக்கும் போல இருக்குடா. ஹிந்து மிஷன் ஆஸ்பத்திரிக்குக் கூட்டிட்டுப் போகணும். உனக்கு இவனோட வீடு தெரியுமா..?'' என்று கோபால் சார், ராஜேஷிடம் கேட்டார். ராஜேஷ் பதில் சொல்வதற்குள், ''எனக்குத் தெரியும்... எனக்குத் தெரியும் சார்...'' என்று பல குரல்கள் கேட்டன. வருணுக்குக் கண்ணீர் கோத்து நின்றது. வருண் அதிகமாக யாருடனும் பழக மாட்டான். ஆனாலும், இத்தனை பேருக்கு அவனுடைய வீட்டைத் தெரிந்திருப்பது ஆச்சரியமாக இருந்தது. அவனைச் சுற்றி நின்று கொண்டிருந்த மாணவர்கள் எல்லோருமே அவனுக்கு ஏதாவது ஒருவிதத்தில் உதவ வேண்டும் என்பது போல் உத்வேகத்துடன் இருந்தனர்.

''சார்... நான் ஆஸ்பத்திரிக்குக் கூட்டிட்டுப் போறேன் சார்...''

''சார்... நான் அவன் வீட்டிலே போய்ச் சொல்லிட்டு வர்றேன் சார்...'' என்று ஆளாளுக்கு ஒவ்வொன்றைச் சொன்னார்கள். பாகீரதி மேடமும் அவன் பக்கத்தில் வந்து விசாரித்தார்கள். விட்டால், எல்லோரும் அவனை அப்படியே தூக்கிக் கொண்டே போய் விடுவார்கள் போலிருந்தது. மழை வருவது போல் இருட்டிக் கொண்டு வந்தது. காற்றும் வேகமாக வீசி

**''உங்க வீட்டு மொட்டைமாடி என்ன அம்புட்டு உசரமாடா?''**

யது. கோபால் சார் ஒரு ரிக்ஷாவைக் கூட்டிக் கொண்டு வந்தார். அதில் வருணை ஏற்றி உட்கார வைத்தார். பக்கத்தில் அவரும் உட்கார்ந்து கொண்டார். ராஜேஷும், கிர்த்திவாசனும் எதிரே இருந்த பலகையில் உட்கார்ந்து கொண்டனர். பைகள் காலடியில் கிடந்தன. கிருஷ்ணமூர்த்தி வருணின் வீட்டில் போய்த் தகவல் சொல்வது என்று ஏற்பாடாகியது.

கோபால் சார், ''அவங்க வீட்டிலே பதற்றமாயிடப் போறாங்க. ஒண்ணும் பயமில்லே. ஆஸ்பத்திரியிலே இருந்து இப்போ வந்திடுவான்னு சொல்லு...'' என்று கிருஷ்ணமூர்த்தியிடம் கூறினார். கிருஷ்ணமூர்த்தியுடன் மணிகண்டனும், ''நானும் கிருஷ்ணமூர்த்தி கூடப் போறேன் சார்...'' என்றான். கோபால் சார் சம்மதம் கொடுத்தார். ரிக்ஷா புறப்பட்டது. பக்கத்தில்தான் மிஷன் ஆஸ்பத்திரி.

**(தொடரும்)**

அமரர் கல்கி



# தமிழ் பவனம் வேண்டும்!

**தாகூரின் நூற்றி ஐம்பதாவது பிறந்த நாள் கொண்டாட்டத்தை முன்னிட்டு நினைவுகூறல்.**

டாக்டர் தாகூரை பிரார்த்தனை மண்டபத்திலே மட்டும் நான் பார்க்கவில்லை. சாந்திநிகேதனத்திலுள்ள ஒவ்வொரு கட்டடத்திலும் குடிசையிலும் அவரைப் பார்த்தேன். ஒவ்வொரு செடியிலும் கொடியிலும், ஒவ்வொரு மரத்திலும் மலரிலும் அவரைப் பார்த்தேன். ஒவ்வொரு ஆசிரியரிடத்தும் ஒவ்வொரு மாணவரிடத்தும் அவரைப் பார்த்தேன். ஒவ்வொரு சிற்பத்திலும் சித்திரத்திலும் பார்த்தேன். ஒவ்வொரு விழாவிலும் வைபவத்திலும் பார்த்தேன்.

எங்கே திரும்பினாலும் மகாகவி தாகூரின் சாந்தம் குடிகொண்ட திருமுகம் தோன்றிக்கொண்டிருந்தது. அவருடைய அமுதக் கவிதைகள், அங்குள்ள மரஞ் செடிகளின் மர்மர சப்தத்தில் ஒலித்துக் கொண்டிருந்தன. அவருடைய ஆத்மாவின் தபோசக்தி காற்று வெளியெல்லாம் பரவிச் சூழ்ந்து, அந்தப் பிரதேசத்துக்கே தூய்மை அளித்துக்கொண்டிருந்தது.

டாக்டர் தாகூர் ஒரு மகாகவி மட்டுமல்ல; மகாஞானி; மகா தேசபக்தர்; மகா தியாகி; மகா தபஸ்வி. காந்தி மகாத்மாவினால் 'குருதேவர்' என்று போற்றப்பட்ட ஆத்ம சக்திவாய்ந்த பெரியார். அவரால் ஸ்தாபிக்கப்பட்ட சர்வ தேச ஸ்தாபனத்தில், தெய்வத் தமிழ் மொழிக்கு ஓர் இடம் இருப்பது மிக அவசியம். சீனபவனத்தைப் போல் 'தமிழ் பவனம்' அல்லது 'தக்ஷிண பவனம்' அங்கு ஏற்பட்டால் மிகவும் மேன்மையாயிருக்கும்.

செட்டிநாட்டு அரசர் தமிழ் பவனத்துக்கு அஸ்திவாரம் அமைத்திருக்கிறார். அதாவது தமிழ்ப் புத்தக நன்கொடை அளித்திருக்கிறார். அந்தப் புத்தகங்களை வைக்க ஒரு தனிக் கட்டடமும், அந்தக் கட்டடத்திலே ஒரு தமிழ் ஆசிரியரும் அடுத்தபடியாக வேண்டும். தமிழ் ஆசிரியருக்கு உதவியாக இன்னொரு ஆசிரியரும், அவர்களுடைய உதவி கொண்டு ஆராய்ச்சி நடத்தும் மாணவர்களும் பின்னால் சேர்வார்கள். இப்படியாக, செட்டி நாட்டு அரசரின் புத்தக நன்கொடை, ஒரு தமிழ் பவனமாக வளர்ந்து விட வேண்டும் என்பது பலருடைய மனோரதம்.

தெய்வத் தமிழின் சிறப்பை உலகம் அறியச் செய்ய வேண்டுமென்றால், மகாபுருஷர் டாகூர் அமைத்த சாந்திநிகேதனத்தில் 'தமிழ் பவனம்' ஏற்பட வேண்டும்.

**- கல்கி, பொங்கல் மலர், 1947**

கல்வெட்டுகள்

ஒருத்தருக்கு அம்மை போட்டிருக்கு. வேப்பிலைக் கொத்தை வூட்டு வாசல்ல கட்டி வைக்குறாங்க. ஆத்தாளுக்கு (அம்மனுக்கு) உள்ளங்கையில வேப்பிலையை பரப்பி தீச்சட்டியேந்தி நடந்து போறாங்க. வேம்புல அப்பிடி என்ன மகிமை? திருச்சி-கரூர்-பெரம்பலூர் மாவட்டங்களின் அரசு மாவட்ட சித்த மருத்துவ அலுவலர் டாக்டர் எம்.எஸ்.சுகுமார் அவர்களைச் சந்தித்தோம். ஆல்-ரவுண்டர் வேம்புவைப் பற்றி அவர் அள்ளித்தந்த தகவல்கள்:

* வேம்பு, துளசி, அருகம்புல் ஆகிய மூணும் தெய்வீக மூலிகைகள். அம்மனுக்கு வேம்பு, பெருமாளுக்கு துளசி, விநாயகருக்கு அருகம்புல். வேப்பிலை-மஞ்சள் கலந்த தண்ணீர்தான், பெரும்பாலான அம்மன் கோயில்கள்ல தீர்த்தமாகத் தரப்படுது. தீர்த்தக் குடங்கள்ல வேப்பிலைய ஊறப் போட்டிருப்பாங்க.
* கோடை காலத்துல ஏற்படக்கூடிய எல்லாவித நோய்களையும் தடுத்து நிறுத்தக்கூடிய அபார சக்தி வேப்பிலைக்கு உண்டு.
* வெண்ணெய் நீக்கப்பட்ட மோரில் வேப்பிலைச் சாந்து கலந்து அருந்தினால், உடல் உஷ்ணம் சீராகும். பசியின்மை பறந்துடும். வயிறு உப்புசம், பொருமல் எல்லாம் ஓடிப் போயிடும்.
* கோடையில திடீர் விருந்தினரா

**வேப்ப எண்ணெய் விளக்கு எரியற எடத்துல கொசுக்கள் எட்டிப் பார்க்குறது இல்லை.**





வர்ற அம்மையும், காலராவும், சடார்னு எட்டிப் பார்க்கிற சீதபேதியும், சுரக்காய்ச்சலும் கூட வேப்பிலை மருத்துவத்துக்குக் கட்டுப்படும்.

* அம்மை நோய் கண்டவங்க வூட்டு வாசல்ல, வேப்பிலைக் கொத்தைச் செருகி வெச்சிருப்பாங்க. அந்த வூட்டுக்குள்ளார வெளியாள் யாரும் உள்ளே போக மாட்டாங்க. காரணம், நோய்க்கிருமிகள் தொத்திக்கும். வேப்பிலைக் கொத்துல பட்டு மோதி தவழ்ந்து வரும் காத்துல கிருமிகள் பரவாது.



* எம்.எஸ்.சுகுமார்

* அம்மை நோய்கள்ல ரெண்டுவிதமானதுதான், இப்ப தொடருது. ஒண்ணு பூட்டுத்தாழ் அம்மை. ஒரு பக்க கன்னம் மற்றும் தாடைப் பகுதியில வீக்கமா இருக்கும். கிராமங்கள்ல இதனை 'பொன்னுக்கு வீங்கி'னு சொல்வாங்க. இன்னொண்ணு, மணல்வாரி அம்மை.

* பூட்டுத்தாழ் அம்மை கண்டவங்களுக்கு, அந்த எடத்துல

# ஆல்ரவுண்டர் வேம்பு!

வேப்பிலை - மஞ்சள் சாந்து பூசி விடுவாங்க. வேப்பிலையில மஞ்சள் சேர்த்து அரைச்சு, அந்தச் சாந்தை பூசணும்.

* மணல்வாரி அம்மை கண்டவங்க உடம்புல ஆங்காங்கே சின்னச் சின்னக் கொப்புளங்கள் தென்படும். வியர்க்குரு போல இருக்கும். பல நேரங்கள்ல அரிக்கும். கையால சொறிஞ்சிடக் கூடாது. அந்தக் கொப்புளங்கள் மேல வேப்பிலைக் கொத்து கொண்டு மென்மையா தடவணும். வேப்பிலை நுனியில இருக்கற கசப்புத் தன்மை, கொப்புளங்கள் மேல படர்ந்து அரிப்பு வராது.

* பல பேரு மரத்துலேர்ந்து கொளுந்து வேப்பிலையைப் பறிச்சு மென்னு தின்பாங்க. அவ்வளவும் உடம்புக்கு நல்லது. குடல் மற்றும் வயிற்றுப் புண்கள் ஆத்தப்படுது. கிருமிகள் அழிக்கப்படுது.

* வேப்பிலை, ஆரஞ்சுப் பழத்தோல் சமவிகிதமா எடுத்துக்கணும். வெயில்ல காய வைக்கணும். நல்லா காய்ஞ்சதுக்கப்புறம், தேவைப்படும் அளவெடுத்து, மண் சட்டியில போட்டு எரியவுடணும். அதுல கிளம்பி வர்ற புகை, கொசு ஒழிப்பான் ஆகப் பயன்படுது.

* வேப்பம்பூ ரசம். வேப்பம் பூவைப் பறிச்சு நிழல்ல காய வெச்சு, பொடி ஆக்கிக்கிடணும். மிளகு ரசம் வெச்சு கொதிச்சு நுரை பொங்கி வர்றப்ப, வேப்பம்பூ பொடிய அதும் மேல தூவி வுடணும். வேப்பம்பூ ரசம், உடலுக்கு ரொம்ப நல்லது.

ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

## தஞ்சை பரத்வாஜ்

**மேஷம்:** ரொம்ப ஜாலியான வாரமுங்க! கைல பண வசதி சேரும். வியாபாரத்துல தூள் கிளப்புங்க. கடன் இருந்தா, அது காணாம போகுமுங்க. சில பேர் புதுசா வேலைக்குப் போகப் போறாங்கோ! மொத்தத்துல உல்லாசம்தான்! பொளந்து கட்டுங்க!

**ரிஷபம்:** கொஞ்சம் உஷாரா இருக்க வேண்டிய வாரமுங்கோ. வாக்குவாதமெல்லாம் பண்ண வேணாம். கடன்காரன்கிட்ட ஜாக்கிரதையாவே இருங்க. மன உளைச்சல் அதிகம்னாலும் கடவுள்கிட்ட பாரத்தைப் போடுங்க! சரியாயிடும்!!

**மிதுனம்:** இந்த வாரத்துல சில பேருக்கு வீடு மாத்தல், சிலருக்கு உத்தியோக மாத்தலெல்லாம் இருக்குதுங்கோ! திடீர்னு பணமெல்லாம் வருதாங்கோ. சொந்தக்காரங்கள்லாம் ஜில்லுனு மனசு குளிரராப்பல உதவி பண்ணுவாங்களாம். கடவுளைக் கும்பிட்டு நல்லதையே நினையுங்க!

**கடகம்:** சில பேர் இந்த வாரம் டக்கரா வெளி நாடுல்லாம் போவப் போறாங்க!

**சிம்மம்:** நல்லா, சந்தோஷமா இருக்கற வாரமுங்க. நெனைச்ச காரியமெல்லாம் ஜெயிக்குமாம். வியாபாரம் டக்கரா நடக்குமாம். சிலபேரு பூர்விக சொத்தை பங்கு போட்டுக்குவாங்களாம். இத்தனை நாள் அனுபவிச்ச கஷ்டமெல்லாம் தீரப் போகுதுங்கோ!

**கன்னி:** உங்க மனசுக்குப் புடிச்சதெல்லாம் நடக்கிற வாரமுங்க. மனசுல இருந்த பாரமெல்லாம் டக்குனு கொறஞ்சு போயிடும். கடல் கடந்தெல்லாம் சிலபேருக்கு உதவி வந்து சேருதுங்களாம்! வீட்ல சுபகாரியமுங்க. பளிச்சுனு நடக்கப் போகுதுங்க!

**துலாம்:** நெறைஞ்ச மனசோட நிம்மதியா இந்த வாரம் கழியுமுங்க. நெலம், நீச்செல்லாம் வாங்கப் போறீங்க. ரொம்ப நாளா தொல்லை கொடுக்குற பிரச்னை தீரப் போகுதுங்க. சிலபேருக்கு பூர்விக சொத்து கிடைக்கற யோகம் இருக்குங்க.

**விருச்சிகம்:** ஏனுங்க... கொஞ்சம் ஜாக்கிரதையா இந்த வாரத்துல உங்க வேலைகளைச் செய்யுங்க. குடும்பத்துல உங்க குடும்பத்துல உள்ள பிரச்னைகள் தீருமுங்க. சில பேருக்கு வியாபாரம் ஜோரா நடக்கும். பலருக்கு சுபகாரியங்கள் சந்தோஷமாக நிறைவேறுமுங்க. சிலபேருக்கு சுபச் செலவும் உண்டுங்க.

**மகரம்:** அற்புதமான பலன்களை அள்ளித் தரும் வாரமுங்க. திடீர்னு பெரியாளா மாறப்போறீங்க! பணம் வந்து கொட்டப் போவுது! நீங்க தொட்ட காரிய மெல்லாம் பொன்னாகுமுங்க! ரொம்ப உல்லாசமா அனுபவிங்க வாழ்க்கையை!

**கும்பம்:** டக்கரான வாரமுங்க! பணம் பல வழிகள்ல வந்து கொட்டுமாம்! யோகக்காரங்க நீங்க! எந்த வழியிலும் உங்களுக்குன்னு ஒரு முக்கியத்துவம் வருதுங்க. எதிர்காலத்துக்குன்னு கொஞ்சம் சேமிப்பும் கூடுதுங்க! மொத்தத்துல இந்த வாரம் பூரா ஜாலிதான். உம் அனுபவிங்க!

**மீனம்:** உங்களோட சில பிரச்னைகள் இந்த வாரத்துல தீரப்போவுதுங்க. பூர்விக சொத்த விக்கப் போறீங்க. அதுல வர்ற பணத்துல, வீட்ல சுபகாரியம் நடக்கப்

கொஞ்சம் பேர் உத்தியோகத்துல உசந்து போவாங்களாம். பட்சி சொல்லுது! வாகனமெல்லாம் புதுசா வாங்கப் போறீங்க. நிம்மதியா இருங்க!

விட்டுக் கொடுத்துப் போங்க. பணத்துக்குக் கொஞ்சம் சிரமம்தாங்க!! அதனால, கட்டுப்பெட்டியா செலவுகளைக் குறைங்க! மொத்தத்துல கடவுள் கிட்ட பாரத்தைப் போட்டு, நல்லதை எதிர்பார்க்கிற வாரம்!

**தனுசு:** நல்லது நடக்குற வாரமுங்க. போவுது! சில பணவரவுகள் நிச்சய மாகுமுங்க. நெஞ்சுல திருப்தியைக் கொடுக்குற வாரம்தான் இது.

**16.05.2010 முதல்**
**22.05.2010 வரை**





"உனக்குக் கண்ணுல என்னம்மா கோளாறு?"

"அதையேன் கேட்கறீங்க டாக்டர்? பீரோவில் இருக்கும் என் புருஷனோட பேண்ட் சட்டையெல்லாம் கண்ணுக்கு எவர்சில்வர் பாத்திரமாவே தெரியுது.."

- சுல்தானா

# அந்தக் கதை

"அந்த டைரக்டர் கதையை ரொம்ப இரகசியமா வெச்சிருப்பாராமே?"

"ஆமாம்! படத்துல கூட காட்ட மாட்டார்னா பாருங்களேன்!"

- கே.கவின்





"பரீட்சையில் பாஸ் பண்ணினேன்னா ஸ்கூட்டர் வாங்கித் தரேன்னு சொன்னி யேப்பா. ஃபெயில் ஆகி இருக்கேனே. ஒரு சைக்கிளாவது வாங்கித் தரக் கூடாதா?"

- சாயம் வெ.ராஜாராமன்

''வேகமா குனியும்போது கழுத்து பயங்கரமா வலிக்குது.''
''வேகமா ஏன் குனியறீங்க? மெதுவா குனியுங்களேன்.''
''மெதுவா குனிஞ்சா என் மனைவி வீசுற கரண்டி வர்ற வேகத்துக்கு தலையில் காயம் பட்டுடுமே, டாக்டர்!''
- ஆ.விஜயலக்ஷ்மி

# ரொம்ப ரகசியம்!

''டாக்டர்! நீங்க எழுதிக் கொடுத்த முதல் மாத்திரை அபாரம். அதை சாப்பிட்டவுடன் வயித்து வலி பறந்தே போயிருச்சு!''
''அடப்பாவி! இதுக்கு யாரு மருந்து கொடுத்தது! இது பிள்ளையார் சுழியாச்சே!''
- உமாமகேஸ்வரி

''உட்கார்ந்து யோசிப்பாங்களோ?''
''எதைச் சொல்கிறீர் அமைச்சரே?''
''மௌன ராகத்தில் பாட்டு எழுதியுள்ளேன்' என்று சொல்லி, பத்து நிமிடங்கள் ஒன்றும் பேசாமல் நின்று விட்டு, பரிசு வாங்கிச் செல்கிறாரே, அந்த புலவர்! அதைச் சொல்கிறேன்!''
- ப.உமாமகேஸ்வரி



கருத்து: சாயா



டாக்டர் சௌம்யா ஹரிகிருஷ்ணன் மகளிர் ஆரோக்கிய பிசியோ தெரபிஸ்ட்டாகப் பணிபுரிபவர். கர்ப்பிணிப் பெண்களுக்கான சில உடற்பயிற்சி முறைகளை விளக்கிக் கொண்டிருந்தவரிடம், கோடைக்காலத்தில் கர்ப்பிணிப் பெண்கள் எந்தெந்த விஷயங்களில் கவனமாக இருக்க வேண்டும் என்று கேட்டோம்.

"கருவைச் சுமப்பது ஓர் அற்புதமான அனுபவம். அதே சமயம் உடல் மற்றும் மனதில் அப்போது ஏற்படும் மாற்றங்களை ஏற்றுச் சரிசெய்து கொள்வது ஒரு சவாலான அனுபவமாகவும் இருக்கும். அப்போது அந்தத் தாயின் மனதில் உள்ள தன்னம்பிக்கை குழந்தையின் குணப்போக்கிலும் பிரதிபலிக்க வாய்ப்பு உண்டு.

நல்முத்தைச் சுமக்கும் சிப்பியாயிருக்கும் இந்தக் காலகட்டத்தில் மற்றவர்களைவிடத் தாயின் வெப்பநிலை கொஞ்சம் அதிகமாகவே இருக்கும். இந்த நிலையில் கோடை வெப்பமும் சேர்ந்து கொண்டால்? பாவம்தான்.

கோடையின்போது ஒரு கர்ப்பிணிப் பெண் செய்ய வேண்டிய மற்றும் செய்யக் கூடாதவற்றைப் பார்ப்போம்.

★ முடிந்தவரை வெயிலில் வெளியே போகாமல் இருங்கள்.

★ கழுத்துக்குப் பின்புறம், நெற்றி மற்றும் உங்கள் தலைக்கு மேல் நீரில்

# சிப்பிகளுக்கு சின்னச் சின்ன டிப்ஸ்!

-சௌம்யா ஹரிகிருஷ்ணன்



நனைத்துப் பிழிந்த துணியை வைத்துக் கொள்ளலாம்.

★ மிகவும் அதிகமாக வியர்த்தால் நிறைய திரவங்களைக் குடியுங்கள். ஆரஞ்சு ஜூஸ், பால் போன்றவை வியர்வையால் இழந்த எலக்ட்ரோலைட்களை மீண்டும் பெற உதவும்.

★ நீச்சல் பயிற்சியில் தவறில்லை. இதனால் உடல் குளிர்ச்சி பெறுவதோடு, கருவைத் தாங்குவதால் அழுத்தத்தில் உள்ள முதுகெலும்பின் கீழ்ப்புறம் உள்ள நரம்புக்கும் (sciatic nerve) அது இதம் தரும்.

★ பருத்தி உடைகளை அணியுங்கள். அப்போதுதான் மார்பகங்கள் மற்றும் வயிற்றுப் பகுதியில் ஏற்படக் கூடிய சிவப்புத் திட்டுகளை (rashes) தவிர்க்கலாம்.

★ எங்கு போனாலும் கையோடு தண்ணீர் பாட்டிலை எடுத்துச் செல்லுங்கள்.

★ தினசரி உடற்பயிற்சி செய்பவர் என்றால், அதை முடிந்த அளவு வெப்ப மில்லாத நேரத்தில் செய்யுங்கள். எந்தவித உடற்பயிற்சியைச் செய்வதற்கு முன்பும், மருத்துவரிடம் ஆலோசனை பெறுங்கள்.

★ சரியான முறையில் மூச்சு விடுவது கூட உடலைக் குளிர்ச்சியாக வைக்க உதவும். மிக வேகமாகவோ மிக மெதுவாகவோ இல்லாமல் சீராக மூச்சு விடுகிறீர்களா என்பதை உறுதி செய்து கொள்ளுங்கள்.

★ நடுப் பகலில் சூரியன் உடலில் படுவதைத் தவிர்க்கவும். ஏனென்றால், மற்றவர்களைவிடக் கர்ப்பிணிகளுக்கு வெப்பகாயம் (sunburn) உண்டாக வாய்ப்பு அதிகம்.

★ வெளியிடங்களில் உள்ளபோது பலவீனமாகவோ, தலைசுற்றலாகவோ உணர்ந்தால், உடனடியாக வீடு திரும்புங்கள். படுத்துக் கொள்ளுங்கள். குளிர்ச்சியான தண்ணீரைக் குடியுங்கள். அப்போதும் உடல் சரியாகவில்லையென்றால் டாக்டரைப் பாருங்கள்.

★ தொடர்ந்து நின்று கொண்டிருக்க வேண்டாம்.

★ உணவில் உப்பைக் குறைத்துக் கொள்ள வேண்டுமே தவிர, தவிர்த்துவிடக் கூடாது. உப்பில் கலந்திருக்கக் கூடிய அயோடின் சத்து கருவின் ஆரோக்கியத்துக்குத் தேவை.

★ தோல் பிரச்னைகளுக்காக டாக்டரின் ஆலோசனையைக் கேட்கும்போது, நீங்கள் கர்ப்பம் சுமப்பதை மறக்காமல் தெரிவித்து விடுங்கள்.

★ நன்கு தூங்கி ஓய்வெடுங்கள்.

★ இறுக்கமான ஆடைகளைத் தவிர்க்கவும்.

இவற்றைப் பின்பற்றினால், கோடையில் பிரசவம் நிகழ்ந்தால் கூட, அது பற்றிக் கவலைப்படத் தேவையிருக்காது.''







**ஒ**ருவனுக்குள் காதல் வந்தால் மனசுக்குள்தான் போர் மூளும். ஆனால், ஒரு மாநகரத்தையே போர் மேகம் சூழுமா...? என்றால், ''சூழும்.. அதுதான் தம்பி அர்ஜுனா படத்தின் கதை'' என்கிறார் இயக்குநர் விஜய் ஆர். ஆனந்த். இந்தப் படத்தின் கதைக்காக நடிகர் ரமணா, தம் எடையை உடற்பயிற்சி மூலம் 20 கிலோ கூட்டியுள்ளார்!

**(நடிப்பையும் சேர்த்துக் கூட்டினா சரிதான்!)**

தம்பி அர்ஜுனா

பாலுத் தம்பி மனசிலே

''**ம**னத்தளவில் பாதிக்கப்பட்ட தம்பியை, மலையளவு நேசிக்கும் அண்ணனின் கதைதான் 'பாலுத் தம்பி மனசிலே'. ஆனாலும், அண்ணன்-தம்பி பாசம் மட்டுமின்றிக் காதலும் கலந்து வருகிறது'' என்கிறார் இயக்குநர் ஜமின்ராஜா.

''ஒருசில மனிதர்களுக்கு பிறப்பு தரித்திரமாக இருக்கும். ஆனால், இறப்பு என்பது சரித்திரமாக இருக்கும். பிறப்பு இறப்புக்குமான பெருவெளியில், ஊடாடி நிற்கும் உறவின் மகத்துவத்தை உள்ளபடி படமாக்கியிருக்கிறோம். படத்தின் நாயகன் நிர்மல்ஷா. ஆனால், உண்மையிலேயே ஹீரோன்னா அது ஒளிப்பதிவாளர் எஸ்.மூர்த்திதான். அவரது கேமராசென்ஸ் என்னுடைய கதைக்கு பூரணத்துவம் தந்திருக்கிறது'' எனக் கூறுகிறார். மூர்த்தி, ஏற்கெனவே 'படையப்பா', 'அவ்வை சண்முகி' படங்களுக்கு ஒளிப்பதிவு செய்தவர்.

**(கீர்த்தி பெரிது மூர்த்தி சாருக்கு!**

"நீ பார்ப்பதற்கு ஹோம்லி லுக்கோடு இருக்கிறாய். அதனால், தமிழ்ப்படங்களில் நடிப்பதுதான் உனக்கும் உன் எதிர்காலத்துக்கும் நல்லது" - இது நடிகை சிம்ரன், தன் வீட்டருகே வசிக்கும் மற்றொரு நடிகைக்கு தந்த ஆலோசனை. யார் அந்த நடிகை? 'உனக்காக என் காதல்' படத்தின் நாயகி ஷ்ரதா.

"நான் சினிமாவுல நடிக்கப் போறேன்னு சிம்ரன் அக்காகிட்ட சொன்னதும், அவங்க சொன்ன அட்வைஸ்: "நீ முதல்ல டான்ஸ் கத்துக்கோ.. நடிப்புங்கறது மேடைக்கும் சினிமாவுக்கும் வேறுபடும். அதனால அதை ஸ்பாட்லதான் கத்துக்கணும்." அவர் சொன்னது போலவே செய்தேன். அப்புறம் நடிக்க வாய்ப்பு கிடைத்த, 'உனக்காக என் காதல்' படத்தில் அவரது ஆலோசனை மிகவும் உதவியாக இருந்தது" என்கிறார் ஷ்ரதா. ஜெயகுமார் பிலிம்ஸ் நிறுவனத்துக்காக ஜெயக்குமார் தயாரித்து இயக்குகிறார். "நல்ல கேரக்டர்களில் நடித்து நடிகை ரேவதி போலப் பெயர் வாங்க வேண்டும்" என்கிறார் ஷ்ரதா.

***(சிரத்தையாக பண்ணுங்க)***

உனக்காக என் காதல்

விநாயகர் படத்தின் ஹீரோவாக 90 கிலோ எடையுள்ள, தொந்தியும் தொப்பையுமா இருக்கற கிருஷ்ணன் செலக்ட் ஆகியிருக்கிறார். விஸ்வநாதன் ஆனந்துக்கு அண்ணன் போன்ற முகச் சாயல். சிக்ஸ்பேக், ஒல்லிப்பிச்சான்... இதெல்லாம் கோடம்பாக்கம் ஹீரோவுக்கான இலக்கணமாயிற்றே என்று இயக்குநர் பாலசேகரனிடம் கேட்டால், "கதைப்படி 90 கிலோ" என்கிறார். "சாட்டில் காதலிக்கும் ஒருவனை, அவன் காதலி நேரில் பார்க்கும்போது, நீ இவ்ளோ குண்டா இருக்கற! நான் உன்னைக் காதலிக்கவில்லை என்று மறுக்கிறார். காதலன் காதலில் அடைந்தது வெற்றியா... தோல்வியா... என்பது க்ளைமாக்ஸ்" என்கிறார். ஏற்கெனவே லவ் டுடே... உள்ளிட்ட வெற்றிப் படங்களை இயக்கிய பாலசேகரன்.

**பயாஸ்கோப்**

விநாயகா

***(வெய்ட்டான கதைதான்!)***

# ஹீரோ 90k.g.




காதலிக்கும் வயசு இப்ப கட்டெறும்பா ஆச்சு - அது
கோடம்பாக்க வீதிகளில் சீனிதின்னப் போச்சு!
ஊரவிட்டு ஓடிவந்து வருஷம்பல ஆச்சு - பல
ராஜ்ஜியங்கள் பூஜ்ஜியமா ஆகித்தானே போச்சு!

ஆஸ்கரு வாங்கத்தானே எல்லாக்காரும் பறக்குது - அது
பர்கருக்குள் பழஞ்சோத்தை பக்குவமா மறைக்குது!
ஷாட்டு கட்டு சொல்லிக்கொண்டு மேன்ஷன்கதவு திறக்குது - அது
போர்வைக்குள்ள தூங்கும்கனவை மெல்லதட்டி எழுப்புது!

ஆக்கர்பட்ட பம்பரமாய் நிதானமாய் சுத்தறேன் - அட
தண்ணியால கண்டமில்ல கண்டம்விட்டு ஓடுறேன்!
ஜெயிச்சவனும் தோற்றவனும் சேர்ந்துதானே சிரிக்கிறான் - அட
டாஸ்மாக் கடையிலதான் சமத்துவத்த தேடுறான்!

ஓவியம்:
அனந்தபத்மநாபன்

செல்போனு சிணுங்கும்போது அடிமனசு பதறுது - அது
தங்கை இப்ப பெரியமனுஷி ஆகிட்டாள்னு அலறுது!
குத்தகைக்கு விட்ட நிலம் கைநழுவிப் போகுது - அது
ஆத்தாளோட ஆஸ்பத்திரி கட்டணமா மாறுது!

திராட்சைத்தோட்ட நரியப்போல மண்டையில கிறுக்கு - பல
சூடுபட்ட பூனைப்போல பழங்கதைகள் இருக்கு!
கூடுவிட்டுக் கூடுபாய மனசு சிறகு விரிக்கும் - இந்த
கேடுகெட்ட வாழ்க்கைக்குத்தான் விடிவு எப்ப பொறக்கும்?

எங்க ஊரு அய்யனாரு கையில்கத்தி மொக்க- அட!
என்னச்சொல்லி என்கதையை பட்டணத்தில்விக்க!
மீனத்தேடி காத்திருக்கு குளத்துமேல தக்க - ஒரு
கொக்குவந்து தூக்கிப்போதே நாங்க எப்பஜெயிக்க?

ரா. நாகப்பன்

# ஒரு சினிமாக்காரன் கதை

# தண்டனை

அரிவாளும் கையுமாகக் காலையில் துகிராமும் அவன் தம்பி சிதமும் வேலைக்குப் போகும் பொழுது, அவர்கள் மனைவியரி டையே ஒரு வசைப்புயல் சூழும். அக்கம்பக்கத்தாருக்கு இந்தச் சண்டை பழக்கமாகிவிட்டிருந்தது. இயற்கையின் கொந்தளிப்புகளைப் போல. சூரியன் கிழக்கே உதிப்பது பற்றி யாரும் கேள்விகள் கேட்பதில்லை. ருயிகள் வீட்டில் ஓரகத்திகளிடையே நடக்கும் சண்டையின் காரணத்தை அறிய, யாருக்கும் ஆவல் இருக்கவில்லை. அண்ணனும் தம்பியும் இந்தச் சண் டையை ஒரு பொருட்டாகக் கருது வதில்லை. அந்தச் சம்பவம் நிகழ்ந்த அன்று அண்ணனும் தம்பியும் வேலையிலிருந்து களைத்துத் திரும்பி யிருந்தார்கள். வீடு பயங்கர அமைதி யாக இருந்ததைக் கண்டு வாயடைத் துப் போனார்கள். அன்று பிற்பகல் பலத்த மழை பெய்திருந்தது. மழை யில் சொட்டச் சொட்ட நனைந்து, போதுமான கூலியும் கிடைக்காமல், கடுஞ்சொற்களையும் அவர்கள் கேட்க வேண்டியிருந்தது. வெள்ள நீருக்கும் சேற்றுக்கும் ஊடே அவர்கள் வீட்டுக்கு வந்தபோது, சின்னவள் சந்திரா தரையில் படுத்திருப்பதைப் பார்த்தார் கள். அவளும் இந்த மேகங்களப்பிய நாளும் அன்று நிறையக் கண்ணீர் வடித் திருந்தார்கள். மாலை நெருங்குகையில், அவள் அழுவதை நிறுத்திவிட்டுப் புழுங்கிக் கொண்டிருந்தாள். பெரியவள் ராதா 'உம்'மென்று திண்ணையில் உட் கார்ந்திருந்தாள். அவளுடைய ஒன்றரை வயது பையன் அழுது விட்டு, முற்றத்தின்



**வங்காள மூலம்: ரவீந்திரநாத் தாகூர்**
**ஆங்கிலவழி மொழியாக்கம் தமிழில்: ஜான்னவி**




ஒரு பக்கத்தில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தது.

பசியோடிருந்த அண்ணன் துகிராம் உள்ளே நுழைந்ததும், எந்தப் பீடிகையுமின்றி ''சாப்பாடு போடு'' என்றான். அது வெடிமருந்துக் கோணியில் பட்ட நெருப்புப் பொறி போலானது. ராதா உடனே உச்சஸ்தாயியில் கத்தினாள். ''உனக்குக் கொடுக்க எங்கிருந்து சோறு கிடைக்கும்? நீ எனக்கு அரிசி கொண்டு வந்து கொடுத்தாயா? இல்லை அதையும் நான் வெளியே போய்தான் சம்பாதிக்க வேண்டுமா?''

அன்று முழுவதும் பட்ட அவமானம், சலிப்பு, இருண்ட, மனச் சோர்வளிக்கும் வீட்டில் சாப்பிட ஏதும் இல்லாதது, பசியின் பிறண்டல், மனைவியின் கடுஞ் சொற்கள், குறிப்பாக அவள் கடைசிக் கேள்வியில் மறைந்திருந்த நக்கல், எல்லாம் சேர்ந்து துகிராமுக்குப் பொறுக்க முடியாமல் போனது. ஆத்திரம் கொண்ட புலியைப் போல அவன் இடிக்குரலில், ''என்ன சொன்னாய்?'' என்று உறுமியபடி அரிவாளைக் கையிலெடுத்து, யோசியாமல் அவள் தலையில் அடித்தான். ராதா சின்ன ஓரகத்தியின் மடியில் விழுந்து அக்கணமே இறந்து போனாள்.

தம்பி மனைவி சந்திரா ரத்தக் கறையான உடைகளோடு, ''என்ன ஆயிற்று'' என்று அலறினாள். தம்பி சிதம் தன் மனைவியின் வாயைப் பொத்தினான். துகிராம் அரிவாளைப் போட்டுவிட்டு, அப்படியே சரிந்து உட்கார்ந்தான். குழந்தை விழித்துக் கொண்டு அலறி அழுதது.

**ரா**ம்லோசன் சக்ரவர்த்திக்கு, துகி வாடகை பாக்கி கொடுக்க வேண்டுமென்பது திடுமென நினைவு வந்தது. குடையை எடுத்துக் கொண்டு புறப்பட்டு வீட்டினுள் நுழைந்தபோது, ஏதோ விபரீதமாக உணர்ந்தார். விளக்கு எதுவும்

''இந்த முக்கியமான கேஸ் ரொம்பவே குழப்புதே?''

''டோன்ட் வொர்ரி சார். நம்ம கபாலி கிட்டே கேட்டுப் பார்ப்போம். சுலபமா தெளிவு கிடைச்சுடும்!''

-வெ.நா.சிவகுமார்



ஏற்றப்பட்டிருக்கவில்லை. சில இருண்ட நிழல்கள் திண்ணையில் லேசாகத் தெரிந்தன. குழந்தை 'அம்மா' என்று அழுதபோது, சிதம் அதன் வாயைப் பொத்திக் கொண்டிருந்தான். சற்று பயந்து போன ராம்லோசன் கேட்டார்,

''துகி, நீ இங்கிருக்கியா?''

சிலை போல இவ்வளவு நேரம் அசைவற்று உட்கார்ந்திருந்த துகி, தன்னை அழைப்பது கேட்டதும் ஒரு குழந்தையைப் போல அடக்க மாட்டாமல் அழத் தொடங்கினான். சிதம் திண்ணையிலிருந்து இறங்கி வந்தான். ராம்லோசன் கேட்டார், ''பெண்கள் சண்டைக்குப் பிறகு இப்போது அமைதியாக இருக்கிறார்களா? இன்று நான் முழுவதும் அவர்களின் கூக்குரலைக் கேட்டேன்.''

''ஆமாம், இன்று சரியான சண்டைதான்'' என்று சொன்னான். திண்ணையை நோக்கி நடக்கத் துவங்கிய ராம்லோசன் கேட்டார், ''ஆனால் துகி ஏன் அழுது கொண்டிருக்கிறான்?'' சிதமுக்கு எந்த வழியும் புலப்படவில்லை. ஒரு திடீர் உந்துதலில் அவன் சொன்னான், ''சண்டையில் என் மனைவி சந்திரா, அண்ணி ராதாவைத் தலையில் அரிவாளினால் பலமாக அடித்து விட்டாள்.''

ஒரு பொய், உண்மையை விட ஆபத்தானதாக இருக்கக் கூடுமென்று அவனுக்குத் தோன்றவில்லை. ராம்லோசனின் கேள்விக்கு அவன் தலைக்குள் ஒரு அவசர பதில் வந்தது. அதை உடன் கொட்டி விட்டான். ராம்லோசன் திடுக்கிட்டார். ''ஆ! என்ன சொல்கிறாய்? அவள் இறந்துவிடவில்லையே?''

''அவள் இறந்து விட்டாள்'' என்ற சிதம் ராம்லோசனின் கால்களில் விழுந்தான். ராம்லோசனால் தப்பிப் போக முடியவில்லை. கடவுளே, என்ன சங்கடத்தில் மாட்டிக் கொண்டேன்! மீதமுள்ள என் வாழ்நாளெல்லாம் நான் கோர்ட்டில் சாட்சி சொல்ல வேண்டியிருக்கும்... சிதம் அவர் பாதங்களை விடவில்லை. ''மதிப்புக்குரிய ஐயா, என் மனைவியைக் காப்பாற்ற நான் இப்போது என்ன செய்வது?''

ராம்லோசன் கிராம முழுவதற்கும் வழக்கு விவகாரங்களில் ஆலோசகர். சற்று யோசித்து விட்டுச் சொன்னார். ''ஒரு வழிதான் இருக்கிறது. உடனே போலீஸ் ஸ்டேஷனுக்கு ஓடு. உன் அண்ணா துகி மாலை வீட்டுக்கு வந்து சாப்பாடு கேட்டான். சாப்பாடு தயாராக இல்லாததால், அவன் தன் மனைவியை அரிவாளால் தலையில் அடித்து விட்டான் என்று அவர்களிடம் சொல்லு. இதை நீ சொன்னாயானால் இந்தப் பெண்ணை நிச்சயம் காப்பாற்றி விடலாம்.'' சிதமுக்குத் தொண்டை வரண்டது. எழுந்து நின்று

அவன் சொன்னான், ''ஐயா, ஒரு மனைவி போனால் எனக்கு இன்னொரு மனைவி கிடைப்பாள். ஆனால் என் அண்ணா தூக்கிலிடப்பட்டால், இன்னொரு அண்ணா எனக்கு நிச்சயமாகக் கிடைக்க மாட்டார். ஆனால் தன் மனைவி மேல் பழிபோட்டபோது அவன் இதையெல்லாம் யோசித்திருக்கவில்லை. இப்போது அவன் மனம் அவனறியாமலே அவன் செயலுக்கு ஆதரவாக ஆறுதலையும் வாதங்களையும் சேகரித்துக் கொண்டிருந்தது.

ராம்லோசனுக்கு சிதம் சொன்னது நியாயமாகப் பட்டது. ''அப்படியானால் போலிஸிடம் என்ன நடந்ததென்பதை மட்டும் சொல். எல்லோரையும் காப்பாற்றுவதென்பது முடியாத காரியம்''. இப்படிச் சொல்லிவிட்டு சென்று விட்டார். விரைவில் கிராமம் முழுவதும், சந்திரா ஆத்திரத்தில் மூத்த ஓரகத்தியைத் தலையில் அரிவாளால் அடித்துக் கொன்று விட்டாள் என்ற செய்தி பரவியது. அணை உடையும் போது தண்ணீர் பெருக்கெடுத்துப் பாய்வது போல, போலீஸ் கிராமத்தினுள் நுழைந்தது. குற்றவாளிகளும் அப்பாவிகளும் ஒருங்கே நிம்மதி இழந்தார்கள். சிதம் சந்திராவிடம் பழியை ஏற்றுக் கொள்ளுமாறு சொன்னதும், அவள் இடி விழுந்தாற் போலானாள். அவன் அவளுக்குத் தெம்பூட்டினான். ''நான் சொல்கிறபடி செய். பயப்பட ஒன்றுமில்லை. நாங்கள் உன்னைக் காப்பாற்றுவோம்.'' ஆனால், அவன் தொண்டை வறண்டு முகம் சாம்பலாக வெளுத்திருந்தது.

சந்திராவுக்குப் பதினேழு அல்லது பதினெட்டு வயதுதானிருக்கும். குட்டையாக, கச்சிதமான உடற்கட்டோடு நல்ல ஆரோக்கியமாக இருந்தாள். அவள் வருவதும் போவதும், நிற்பதும் உட்காருவதும் எல்லாமே ஒயிலாக இருக்கும்.

அவனும் கவர்ச்சியாகத் தோன்றக் கனிசமான அக்கறை எடுத்துக் கொண்டான். அவனுக்கு இளம் மனைவி மேல் அலாதியான காதல் இருந்தது. அவர்கள் சண்டை போடுவார்கள். பிறகு ஒருவரை ஒருவர் தோற்கடிக்க முடியாமல் சமாதானம் செய்து கொள்வார்கள். அவர்களுடைய வலுவான பந்தத்துக்கு இன்னொரு காரணம் இருந்தது. இவ்வளவு 'துறுதுறு'-வென்ற அழகான மனைவியை முழுவதும் நம்ப முடியாதென்று சிதம் நினைத்தான். 'என் புருஷனின் கண்கள் எப்போதும் அலைந்து கொண்டிருக்கின்றன. நான் அவனை இறுக முடிந்து வைக்காவிட்டால், என் கைகளிலிருந்து ஒருநாள் நழுவி விழுவான்' என்று சந்திரா நினைத்தாள்.



''கபாலி... நீ சொல்வது உண்மை தான்னு நான் எப்படி நம்புறது?''

''வாழ்க்கையே நம்பிக்கையில் தான் எஜமான் ஓடிக்கிட்டிருக்கு...''

**- எம்.மிக்கேல் ராஜ்**

அவர்களிடையே ராதாவின் சாவுக்கு முன்பு ஒரு நாள் பெரிய சண்டை மூண்டது. சிதம் வேலை இருக்கிறதென்ற சாக்கில் பயணம் போய்விட்டு ஓரிரு நாள் பொறுத்து, கூலி ஏதும் கொண்டு வராமல் திரும்புவான். இது பிடிக்காமல் சந்திராவும் சற்று அத்து மீறத் தொடங்கினாள். நதிக்கு வேலை கெட்ட வேளை யில் போவாள். கிரா மத்தை 'ரவுண்ட்' அடித்துவிட்டு காசி ம ஜு ு ம் த ா ரி ன் இ ர ண் ட ா வ து




மகனுடன் நீண்ட நேரம் பேசிக் கொண்டு நிற்பாள். சிதம் தன் பகலிலும் இரவிலும் யாரோ விஷத்தைக் கலந்து விட்டாற்போல உணர்ந்தான். ராதாவைக் கேட்டபோது, அவளும் சந்திராவைப் பற்றி மோச மாகவே சொன்னாள். சந்திராவை வீட்டிலடைத்து வைக்க சிதம் முயன்றபோது, அவள் எப்படியோ வெளியேறி தன் பெரியப்பா வீட்டுக்குப் போய்விட்டாள். மிகவும் கஷ்டப்பட்டு, பலமுறை கெஞ்சி சிதம் அவளை வீட்டுக்கு அழைத்து வந்தான். அவள் மேல் அவன் கொண்டிருந்த தீராக் காதல், அவனுக்கு மிகுந்த விட்டு விட்டுத் தெறிக்கும் வலியைக் கொடுத்தது. அவள் இறந்து விட்டால், கொஞ்சம் மன அமைதி கிடைக்கும் என்று கூட அவன் சில சமயம் நினைத்தான். யமதர்மராஜனைக் கண்டு பொறாமைப் படுவதைவிட, மனிதர்கள் ஒருவர் மேலொருவர் அதிகம் பொறாமை கொள்கிறார்கள்.

நிலைமை இவ்வாறிருந்தபோது, கொலைப் பழியை ஏற்றுக் கொள்ளுமாறு சிதன் அவளிடம் கூறினான். அதிர்ச்சியுற்ற சந்திரா அவனைச் கட்டெரிப்பது போலப் பார்த்தாள். அவள் உடலும் மனமும் குறுகிப் போயின. அவள் உள்மனம் முழுவதும் வெறியோடு அவனுக்கு எதிராகத் திரும்பியது. சிதம் போலீஸிடமும் மாஜிஸ்ரேட்டிடமும் என்ன சொல்ல வேண்டுமென்பதை திரும்பத் திரும்பச் சொல்லிக் கொடுத்தான். சந்திரா அதை சற்றும் சட்டை செய்யாமல் மரம் போல் அமர்ந்திருந்தாள். அவள் ஓரகத்தி அவளைக் குறி வைத்து ஒரு மீன்வெட்டும் கத்தியோடு வந்ததாகவும், அரிவாளைக் கொண்டு அவளைத் தடுக்க முயல்கையில், எப்படியோ ராதா மேல் அடிபட்டுவிட்டது என்று சொல்லுமாறு சொல்லிக் கொடுத்தான். இவையெல்லாம் ராம்லோசன் ஜோடித்தவை.

போலீஸ் வந்து விசாரணையைத்

துவங்கினார்கள். போலீஸ் சந்திராவைக் கேள்வி கேட்டபோது அவள் எல்லா கேள்விக்கும் ஒரே பதிலைச் சொன்னாள். ''ஆமாம். நான் அவனைக் கொன்று விட்டேன்.''

இன்ஸ்பெக்டருக்கு சந்திராவிடமிருந்து இதே பதில்தான் மீண்டும் மீண்டும் கிடைத்தது. தன் முழு சக்தியையும் உபயோகித்து அவள் தூக்கு மேடையை நோக்கிச் சென்று கொண்டிருந்தாள். சந்திரா செஷன்ஸ் கோர்ட்டுக்கு அனுப்பப் பட்டாள். சிதம் சாட்சிக் கூண்டுக்கு வந்தபோது, அவனைப்பற்றிய கேள்வி களுக்கு சந்திரா 'அவன் தன் புருஷன்' என்றும், தாங்களிருவரும் ஒருவரை ஒருவர் மிகவும் நேசிப்பதாவும் முகத்தை மூடிக் கொண்டு தெரிவித்தாள்.

சிதமிடம் விசாரணை நடந்தபோது அவன் சொன்னான்,

''கொலையை நான் செய்தேன்.''

''ஏன்''

''நான் சாப்பாடு கேட்டேன். ராதா கொடுக்கவில்லை.''

துகிராம் சாட்சி சொல்ல வந்து மயக்கம்போட்டு விழுந்தான். தெளிந்த வுடன் சொன்னான், ''ஐயா, கொலையை நான் செய்தேன்.''

''ஏன்?''

''நான் சாப்பாடு கேட்டேன். எனக்குக் கிடைக்கவில்லை.''

விசாரணை, வாக்குமூலங்கள் இவற்றுக் குப் பிறகு நீதிபதி, குடும்பப் பெண்ணை தூக்கிலிடப்படும் அவமானத்திலிருந்து காப்பாற்ற அண்ணனும் தம்பியும் பழியை ஏற்றுக் கொள்கிறார்கள் எனக் கண்டார்.

சந்திரா தான் முதலில் சொன்னதையே, எந்த மாறுபாடுமின்றி செஷன்ஸ் கோர்ட் வரை சொல்லி வந்தாள். அவளைக் காப் பாற்ற முயன்ற இரு வக்கீல்கள் தோல்வியே கண்டனர். இந்தச் சின்னஞ் சிறு, உருண்டை முகமுள்ள பெண் தன்



பொம்மைகளை அப்பா வீட்டில் விட்டு விட்டு, மாமனார் வீட்டில் நுழைந்தபோது, அந்த சுபவேளையில் யார் இப்படி கற்பனை செய்திருக்க முடியும்? மரணப் படுக்கையில் அப்போது கிடந்த அவள் அப்பா நிம்மதியோடு சொன்னார், ''நான் அவளை நல்ல இடத்தில் விட்டிருக் கிறேன்''

சிறையில், இளகிய மனம் கொண்ட அந்த டாக்டர் சந்திராவைக் கேட்டார்,

''சிறையில் உனக்கு யாரையாவது பார்க்க விருப்பமா?''

''என் அம்மாவை ஒருமுறை பார்க்க விரும்புகிறேன்''

''உன் புருஷன் உன்னைப் பார்க்க விரும்புகிறான். அவனை உள்ளே அழைக் கட்டுமா?''

''அதைவிட நான் செத்துப் போவேன்.''

சீசனுக்கு ஏத்த மாதிரி, இயற்கையும் நிறைய சேஞ்சஸ் செய்யுதுங்க. வெயிலை அள்ளி இறைக்கும் அதே வேளையில், வேதனையிலிருந்து தப்பிக்க வாட்டம் நீக்கும் கனிகளையும் வாரி வழங்கத் தயங்குவதில்லை. இந்த சீசனுக்கு, எந்தப் பழம் என்ன பலன்னு தெரிஞ்சுக்கிட்டா கடவுளின் ரகசியத்தைக் கண்டவராவோம்.

அதிகமாக இறைச்சி சாப்பிட்டால், அதனால் உண்டாகும் தீய விளைவுகளைத் தவிர்க்கக் கூடியது. டைஃபாயிடு காய்ச்சல் வந்தவர்களுக்கு இதன் சாறை அளிக்கலாம். குடல் பகுதியில் சேரக் கூடிய நச்சுக்களை அகற்றும் தன்மை வாய்ந்தது. - **ஆரஞ்சுப் பழத்துக்கு இத்தனை மகத்துவங்கள்!**

நெஞ்செரிச்சல் கொண்டவர்களுக்கும் சுகமளிக்கும். காரணம் இதில் உள்ள ஆல்கலி சத்துக்கள். தாகத்தை நன்றாகவே தீர்க்கும். ஒருவிதத்தில் ஆன்டி-செப்டிக்காகவும் பயன்படுகிறது. வைட்டமின் ஏ, பி, சி அடங்கியது. அதிக ரத்தக் கொதிப்பு உண்டாவதையும் ஓரளவு தடுக்க வல்லது. இதில் உள்ள லைகோபோன் சத்துக்கள் புற்று நோயைக் கூடத் தவிர்க்கக் கூடும். - **இது தர்பூஸ் பழத்தின் தாராள குணம்.**





**சீ**னாவைத் தாயகமாகக் கொண்ட லச்சிப் பழம் அதிகம் கிடைப்பது மே, ஜூன் மாதங்களில்தான். தாகம் தீர்ப்பதுடன், காய்ச்சல் அடங்கவும் உதவும்.

- **(புறத்தில்) பார்க்க அழகாய் இருப்பது மட்டுமின்றி அகத்துக்கு இது ஆரோக்கியமானதாம்!**

# சுவைகளின் ரகசியம்!



**ம**ன்னீரலைப் பெரிதாக்கப் பெரிதும் உதவுகிறது. இதன் விதைகள் சர்க்கரை நோயைக் குணப்படுத்த உதவும். சிறுநீரில் உள்ள சர்க்கரை அளவைக் குறைக்கப் பெரிதும் உதவுகிறது. இரும்புச் சத்து உள்ளதால் அனீமியாக்காரர்களுக்கு நல்லது. ஒல்லியானவர்கள் தொடர்ந்து சாப்பிட்டால் எடை அதிகமாகும். - **இது நாவல் பழத்தின் நல்ல புத்தி.**



**மு**க்கனிகளில் ஒன்றான 'மா'-வில் வைட்டமின் ஏ மற்றும் வைட்டமின் ஸி அடங்கியது. பசியைத் தூண்டும், பார்வைத் திறனைக் கூராக்கும். முழுவதும் பழுக்காத பழங்கள் பயோரியாவைக் போக்கும் ஆற்றல் கொண்டவை.

- **மகிமை நிறைந்த மாம்பழத்தின் மகத்துவமே தனியானதுதான்!**

'கல்லைக் கண்டா நாயைக் காணோம்
நாயைக் கண்டா கல்லைக் காணோம்
- பழமொழி

கேலக்ஸி

# 9 இளமைப் பாலம்

**ஸ்**டீஃபன் ஹாக்கிங்கைப் பற்றி நீங்கள் கேள்விப் பட்டிருக்கலாம். மூளையைத் தவிர, அவர் உடம்பில் ஒரு பாகமும் அவருடைய முப்பத்திரண்டு வயதிலிருந்து, வேலை செய்ய முடியாமல் செயலிழந்து விட்டன. ஆனால், இந்நிலையிலும், ஹாக்கிங், சக்கர நாற்காலியில் இருந்து கொண்டே, எலெக்ட்ரானிக் கருவிகள் மூலம் பேசுகிறார், மிகச் சிக்கலான விஞ்ஞானப் பிரச்னைகளைப் பற்றி, மிகத் தெளிவாக, பிரமிக்கத்தக்க நூல்களை எழுதி வருகிறார். நாற்பதாண்டுகளுக்கும் மேலாக, இந்நிலையில் இருந்தவாறே, அற்புதங்களை நிகழ்த்தி வரும் இவரைப் பார்க்கும்போது, இப்படியொரு மனிதர் இருப்பது சாத்தியமாக இருக்கின்றது என்பதால், யாருக்குமே கடவுள் நம்பிக்கை ஏற்படுவதில் ஆச்சர்யமில்லை. ஆனால், இவர் நமக்குக் கடவுள் நம்பிக்கை ஏதும் கிடையாது என்று சொல்லிக் கொள்கிறார்!

கடவுள் நம்பிக்கை இல்லை என்று சொல்லுகிறவர், அண்மையில் பிரபஞ்சத்தில், வேற்று நட்சத்திர மண்டலங்களில் உயிரினம் இருப்பதற்கான சாத்தியக்கூறுகள் இருக்கின்றன என்று சொல்லியிருப்பதாக ஒரு செய்தி, இன்று செய்தித் தாளில் வந்திருக்கிறது. 'பிரபஞ்சத்தில் நூறு பிலியன் (லட்சம் கோடி) நட்சத்திர மண்டலங்கள் (galaxies) இருக்கின்றன. ஒவ்வொன்றிலும் கோடிக்கணக்கான நட்சத்திரங்கள் உள்ளன. இவற்றில் உயிரினங்கள் உள்ளன, இல்லை என்று இப்பொழுதுள்ள நம் பகுத்தறிவைக் கொண்டு, யாரால் என்ன சொல்ல முடியும்? அவற்றோடு நாம் தொடர்பு வைத்துக் கொள்ள முயல்வது நமக்கு ஆபத்தாக முடியலாம். அமெரிக்காவுக்குக் கொலம்பஸ் போனதினால், அமெரிக்காவில் ஏற்கனவே இருந்த



இந்திரா பார்த்தசாரதி



# என்னுள் நீயும் நானும்...

சிவப்பிந்தியர்களுக்கு ஆபத்தாக ஆனது போல' என்கிறார் ஹாக்கிங்.

**'இப்பொழுது நமக்கு இருக்கிற பகுத்தறிவு'** என்று ஹாக்கிங் சொல்லியிருப்பது மிகவும் முக்கியமானது.

**உ**யிரினத்தின் கொடுமுடி என்று கொண்டாடப்படுகின்ற மனிதனின், பகுத்தறிவுக்கும் அப்பாற்பட்ட விஷயங்களும் இருக்கின்றன. இன்னும் விரிந்து கொண்டே போகும் பிரபஞ்சத்தின் (Universe) எல்லையின்மையைக் கருதும் போது, மனிதனின் இப்பொழுதைய ஆற்றலாகிய பகுத்தறிவு ஓர் அற்பமான விஷயம். பிரபஞ்சத்தில் 99 சதவிகிதம் இன்னும் புரிந்துகொள்ள முடியாத 'இருண்மையான சக்தியாக' (dark energy) இருக்கிறது என்பதை நினைக்கும்போது நமக்குத் தலை சுற்றுகிறது.

ஒருவனைப் பார்த்து 'உனக்குக் கடவுள் நம்பிக்கை இருக்கின்றதா?' என்று கேட்பதும், அதற்கு அவன் 'உண்டு' 'இல்லை' என்று சொல்வதும் இரண்டுமே அபத்தமாகப்படுகிறது. 'உளன் எனில் உளன், அவன் உருவம் இவ்வுருவுகள், உளன் அலன் எனில் அவன் அருவம் இவ்வுருவுகள்' என்று நம்மாழ்வார் கூறியிருப்பதே பொருத்தமான பதிலாகத் தோன்றுகிறது.

**'கடவுள்' என்றால் என்ன?.**

'இறை நிலை'க்குத் (God) தமிழில் 'கடவுள்' என்ற சொல் அமைந்திருப்பது போல், உலகில் வேறு எந்த மொழியிலாவது இருக்கிறதா என்று எனக்குத் தெரியாது.. 'கடவுள்' என்றால் 'கடந்த நிலை' (transcendent) அதாவது, நம்முடைய தற்போதைய அறிவு நிலையைத் தாண்டி, இன்னும் புரிந்துகொள்ள வேண்டியன ஏராளமாயிருக்கின்றன என்று உணரும் நிலை. நாம் மேலும் மேலும் அறிந்து கொள்ள முயலும்போதுதான், நம்முடைய அறியாமையின் எல்லை நமக்கு விளங்கும். 'அறியுந்தொறும் அறியாமை கண்டற்றால்' என்பது குறள். இவ்வாறு அறிந்து கொள்ளும் முயற்சியில் தான், நமக்குள் இருக்கும் ஆற்றல்கள் கொஞ்சம் கொஞ்சமாக வெளிவந்து நமக்குப் புலப்படுகின்றன. இவ்வாற்றல்களின்

அடையாளங்களாகிய விஞ்ஞானம், மெய்ஞ் ஞானம் ஆகியவற்றின் வரலாறும் இங்குதான் தொடங்குகிறது.

மனிதனுக்கு உண்டான பகுத்தறிவு, பரிணாமத்தின் பலனா அல்லது எதேச்சையாக ஏற்பட்ட சம்பவமா அல்லது எல்லாவற்றையும் கடந்து இருக்கக்கூடிய பிரபஞ்ச ஒருமைப்பாட்டு பிரக்ஞையின் (universal unitary consciousness or cosmic super intelligence) உந்துதலா என்பது பற்றி அறிஞர்களிடையே இன்னும் விவாதம் நிகழ்ந்து வருகிறது.



**"கடவுள் அனுபவம் என்பது ஒரு கடல் அலையி**

மனிதனின் சிந்தனை வளர்ச்சிக்கு உதவிய எந்த விஞ்ஞானக் கண்டுபிடிப்புமே, எதேச்சையாக நிகழ்ந்தது என்ற கருத்தும் உண்டு. ஆர்க்கமிடிஸ் தினமுந்தான் குளித்துக் கொண்டிருக்க வேண்டும். ஆனால், அன்று மட்டும் தண்ணீர்த் தொட்டியிலிருந்து நிர்வாணமாகக் குதித்து ஓடி வந்து, ஒரு முக்கியமான பௌதீக விதியை அறிவித்ததாக ஏன் சொல்லப்படுகிறது? மரத்திலிருந்து விழுந்த ஆப்பிள் அன்று மட்டும் நியூட்டனின் சிந்தனைப் பொறியை ஏன் ஊக்குவிக்க வேண்டும்? ஆகவே, இவை அனைத்தும் எதேச்சையான சம்பவங்கள் அல்ல; இவற்றின் பின்னணியில், ஆக்கபூர்வமான ஓர் உந்துதல் சக்தி இயங்கிக் கொண்டிருக்க வேண்டும் என்று கூறும் விஞ்ஞானிகளும் இருக்கிறார்கள்.

இந்தச் சக்தியை எந்தப் பெயரிட்டு வேண்டுமானாலும் அழைக்கலாம்.. உலகிலுள்ள ஒவ்வொரு சமயமும், அதன் கோட்பாட்டுக்கேற்ப இந்தச் சக்திக்குப் பெயரிட்டுக் காண்கின்றனர். இந்தச் சக்தி நமக்குள்ளேயே இருக்கிறது.

*'நன்றாய் ஞானம்*
*கடந்து போய்*
*நல் இந்திரிய*
*மெல்லாம் ஈர்த்து*
*ஒன்றாய்க் கிடந்த*
*அரும்பெரும் பாழ்*
*உலப்பில் அதனை*
*உணர்ந்து உணர்ந்து*
*சென்றாங்கு இன்ப துன்பங்கள்*
*செற்றுக் களைந்து பசை அற்றால்*
*அன்றே அப்போதே வீடு*
*அதுவே வீடு வீடாமே''*

என்கிறது திருவாய்மொழி.

இப்பாட்டைப் புரிந்து கொள்ள வேண்டுமானால், கொஞ்சம் நுண்ணணு பௌதீக அறிவும் (Quantum Physics) தேவைப்படுகிறது.

நம் ஐம்பொறிகளுக்குப் புலனாகும் பொருள்கள் திடப் பொருள்களாகவும் (அசித்-physical matter) காட்சிக்குப் புலனாகாத சக்தி அலை( சித்- Energy& Probability waves) வடிவாகவுமிருக்கின்றன. கண்ணுக்குத் தெரியும் ஒரு நாற்காலி, திடப் பொருள் அளவில் நாற்காலியாகவும், நுண்மையில், காட்சிக்குத் தெரியாத சக்தி அலை வடிவத்திலும் இருக்கின்றது. இதைத்தான் திருமூலர், 'மரத்தில் மறைந்தது மாமத யானை, மரத்தை மறைத்தது

மாமத யானை' என்கிறார்.

ஒரு 'ப்ரோட்டான்' (proton) ஒரு சுழற்சியில் (orbit) காணப்படுவது, திடீரென்று மறைந்து இன்னொரு சுழற்சியில் அதே கணத்தில் தோன்றுவதை (மறைவுக்கும் தோன்று வதற்கும் கால வித்தியாசமே இல்லாமல்) பார்க்கும்


● ஸ்டீபன் ஹாக்கிங்

**...ரி தன்னைக் கடலாக உணரும் அனுபவம்."**

போது, வரையறைக்குட்பட்ட இடம், காலம் ஆகிய அனைத்தையும் கடந்து ஏற்படும் ஓர் அனுபவத்தை அனுமானிக்க முடிகின்றது. இந்த அனுபவந்தான் 'Unitary Universal Consciousness, Consciousness that is fundamentally what is' என்கின்றனர் டாக்டர் அமித் கோஸ்வாமி போன்ற அணுசக்தி - வானவியல் விஞ்ஞானிகள் (Nuclear&Astro Physicists) கூறுகின்றனர். இந்நிலையில், பார்க்கின்றவர், பார்க்கப்படுகின்றவர் என்ற வேறுபாடு (duality) நீங்கி, அனைத்தும் நீக்கமற நிறைந்த ஒருமை (அல்லது யாதொரு வடிவமுமற்ற சூன்யம்) நிலையை அடைகிறது. இதுவே எல்லா வற்றையும் கடந்த 'கடவுள் அனுபவம்'. ஒரு கடல் அலையின் துளி தன்னைக் கடலாக உணரும் அனுபவம்.

இப்பொழுது திருவாய்மொழிப் பாட்டை மீண்டும் படியுங்கள். வரையறைக்குட்பட்ட இடம்,காலம், ஐம்புல இன்பங்கள், பகுத்தறிவு, தர்க்கம் போன்ற ஞானத்தால் புலப்படும் விஷயங்கள் ஆகியவற்றைக் கடந்து, முடிவற்றதாகத் தோன்றும் இடப்பொருள் காட்சி நிலையாகிய அரும்பெரும் பாழையும்- ('பாழ்' என்றால் 'தோற்றம்'- 'பிரகிருதி'- 'அசித்') தாண்டி, மனச்சலனங்களுக்குக் காரணமாகவும் காரியங்களாகவுமிருக்கிற இன்ப துன்ப உணர்வுகளைக் களைந்து, எல்லையின்மையின் ஒருமைப்பாட்டில், இரண்டற்ற தன்மையில் கலந்து விடும் அனுபவமே விடுதலை (மோட்சம்), இறை அனுபவம்..

'பாழ்' என்பது அடிக்கடி ஆளப்படும் ஒரு சொல்.

*'சூழ்ந்து அகன்று ஆழ்ந்து உயர்ந்த*
*முடிவில் பெரும் பாழேயோ*
*சூழ்ந்து அதனில் பெரிய நன்மலர்ச்*
*சோதியோ!*
*சூழ்ந்து அதனில் பெரிய சுடர் ஞான*
*இன்பமேயோ!*
*சூழ்ந்து அதனில் பெரிய என் அவா*
*அறச் சூழ்ந்தாயே!'*

இங்கு 'பாழ்' என்பது முன்னர்க் கூறிய விஞ்ஞானக் கருத்தாகிய பிரபஞ்சத்தை 99 சதவிகித அளவில் சூழ்ந்திருக்கும் 'இருண்மை சக்தியை'யும் (Dark Energy) குறிக்கக்கூடும்.

ஆனால் இதனையும் மனித வாழ்க்கைக்கு அர்த்தப்படுத்திக் காணும் விதமாய், 'என் அவாவும் நானும் அற்றுப் போகும்படியாக, 'சோதியாகவும்' 'இன்பமாகவும்' என்னுள் நீயும் நானும் கலந்து விட்டோம்' என்கிறது இவ்வற்புதமான பாடல்.

'அஹம் ப்ரும்மாஸ்மி'.

**(அடுத்த இதழில் புரட்சி)**



'வெல் அஃப்கோர்ஸ்...' என்று தோனி இதை ஒப்புக்கொண்டுதான் ஆக வேண்டும். (எப்போது மைக் நீட்டினாலும் வெல் அஃப்கோர்ஸ் என்று சொல்லித்தான் பேச ஆரம்பிப்பார் தோனி.) மேற்கு இந்தியத் தீவில் நடந்த டி20 உலகக் கோப்பைப் போட்டியில் இந்திய அணியின் மோசமான ஆட்டத்துக்குக் காரணம், தோனியின் அணித்தேர்வும், தன் அணியின் பலம், பலவீனம் பற்றி அவர் தெரியாமல் இருந்ததும்.

இந்த உலகக்கோப்பைக்காக ஸ்ரீகாந்த் தேர்வு செய்த அணிமீது தோனிக்கு விருப்பம் இல்லை என்பது, அவருடைய அணித்தேர்வில் இருந்து புரிகிறது. எல்லா அணிகளும் குறைந்தது மூன்று வேகப் பந்து வீச்சாளர்கள் + 2 ஸ்பின்னர்கள் என்று ஒரு பலத்தோடு களம் இறங்கும்போது, தோனி மட்டும் முக்கியமான கட்டங்களில் ஜாகிர், நெஹ்ரா, ஹர்பஜன் என மூன்று முக்கிய பந்துவீச்சாளர்களை நம்பி மைதானத்துக்குள் இறங்கியது என்ன நியாயம்? ஐபிஎல்-லில் கூட முறையான ஐந்து பந்துவீச்சாளர்களோடு ஆடினாரே தோனி! தனக்குத்தானே ஒரு பொறி வைத்து, அதில் வகையாக மாட்டிக் கொண்டுவிட்டார்.

பார்படோஸ் போன்ற வேகப் பந்து வீச்சுக்குச் சாதகமான பிட்சில், வினய் குமாரைத் தேர்ந்தெடுக்க தோனிக்கு மனமில்லை. அதே போலவே பியூஷ் சாவ்லாவும். ஆனால்

# ஏன் இப்படி

-ச.ந.கண்ணன்

தோனிக்கு ஜடேஜாவின் மீது அதிக நம்பிக்கை. வாய்ப்புகள் கொடுத்து கொடுத்து வளர்த்துப் பார்க்கிறார். அந்தோ பரிதாபம்!

ஜடேஜா, உருப்படியான ஸ்பின்னரா கவும் இல்லாமல், நல்ல பேட்ஸ் மேனா கவும் இல்லாமல், அரைகுறை திறமை களை வைத்துக்கொண்டு தோனிக்கு மிகவும் சங்கடம் கொடுத்து விட்டார்.

முரளி விஜய்யின் தோல்விகள் யாரை விடவும் ஸ்ரீகாந்துக்குத்தான் மிகவும் வருத் தத்தைத் தரும். வேறொரு தேர்வுக்குழுத் தலைவர் பதவியில் இருந்திருந்தால், விஜய்யால் இவ்வளவு சீக்கிரமாக அணிக் குள் நுழைந்திருக்க முடியாது. ஆனால் விஜய்க்கு கிரிக்கெட் என்றால், மிட்விக் கெட்டில் சிக்ஸர் அடிப்பது மட்டும்தான் என்கிற தவறான புரிதல் இருக்கிறது. அவருடைய எதிர்காலத்துக்கு அவரே பெரிய தடை. இப்போதெல்லாம் கம்பீர், யுவ்ராஜ் ஆட்டமெல்லாம் பார்ப்பதற்கே எரிச்சலாக இருக்கிறது. யூசுப் பதானால் பத்து ஆட்டங்களில் ஒன்றில் மட்டுமே ஜொலிக்க முடியும்.

இப்படிப்பட்ட அணியை வைத்துக்கொண்டு தோனி யால் என்னதான் செய்துவிடமுடியும்! இந்த நிலையில் ஜிம்பாப்வே தொடருக்கு இரண்டாம்நிலை அணியைத் தேர்வு செய்திருக்கிறார் ஸ்ரீகாந்த். அதாவது ஐபிஎல்-ல் எல்லா இந்திய அணி வீரர் களும் கட்டாயமாகக் கலந்துகொள்ள வேண்டும். ஆனால் சர்வதேசப் போட்டி களில், அவர்களுக்கு ஓய்வு கொடுக்கப் படும். நல்ல நியாயம்; நல்ல நிர்வாகம்.

ஐபிஎல் குழப்பங்கள், டி20 தோல்விகள் போன்றவற்றால், இந்திய அணி, பாகிஸ் தான் கிரிக்கெட் போல, மீளாச் சிக்கலில் இருப்பதுபோல ஒரு தோற்றம் உருவாகி யிருப்பது உண்மைதான். ஆனால் இன்றைக்கும் டெஸ்ட் தரவரிசைப்பட்டி யலில், இந்திய அணியே முதலிடத்தில் இருக்கிறது. தைரியமாக, ஆஸ்திரேலி யாவை இரண்டு டெஸ்ட் ஆடவா என்று அழைக்கிறது. அதே நிலைமை ஒருநாள், டி20 ஆட்டங்களுக்கும் திரும்பும் என்று நம்பிக்கை வைப்போம்.









எல்லோருக்குமே புழுக்கத்தை அதிகமாக்கும் கோடை, குழந்தைகளைக் கூடுதலாக வாட்டுகிறது. வாட்டம் தவிர்க்க, வெயிலை வெல்ல சில அறிவுரைகள் தந்தார் டாக்டர் நிகிலா ஷர்மா...

''உடலில் வெப்பத்தைக் கட்டுப்படுத்தும் பகுதிக்கு ஹைப்போதலாமஸ் என்று பெயர். இது மூளையின் நடுப் பகுதியில் உள்ளது. சஹாரா பாலை வனத்தில் வசிப்பவராக இருந்தாலும் சரி, துருவப் பகுதியில் வசிப்பவராக இருந்தாலும் சரி, உடலின் நார்மல் வெப்பநிலை என்பது ஒன்றேதான். வெளியே உள்ள வெப்பம் கோடை காரணமாக அதிகரிக்கும்போது, மூளையில் எச்சரிக்கை மணி அடிக்கிறது - 'இந்த அதிகப்படி வெப்பம் உடலுக்குள் செலுத்தப்படக் கூடாது. எப்படியாவது வெளியேற்றிவிடு' என்று. உடனே வியர்வை பெருகி, அதிகப்படி வெப்பம் வெளியேறுகிறது. மாறாக அதிக் குளிர் என்றால், உடனே உடல் நடுங்கி சூட்டை ஏற்படுத்துகிறது. போர்வையைப் போர்த்திக் கொள்கிறோம்.



●டாக்டர் நிகிலா ஷர்மா

ஆக, வியர்வை என்பது வேண்டாத விஷயம் அல்ல. உடலுக்குப் பாதுகாப்பு அளிக்கும் ஒரு வழிமுறைதான். இப்போது குழந்தைகளைக் கோடையில் பாதிக்கக் கூடிய சிலவற்றைப் பார்ப்போம்.



### உடலில் சிவப்புத் திட்டுக்கள் (rashes)

தடிமனான ப்ளாஸ்டிக் டிரவுசர்களையும் நைலான் போன்ற உடைகளையும் குழந்தைகளுக்கு அணிவிப்பதால், அவர்களின் வியர்வைத் துவாரங்கள் அடைபடக் கூடும். இதைத் தொடர்ந்து குழந்தையின் உடலில் சிவப்புத் திட்டுக்கள் தோன்றலாம்.

உடலில் திட்டுக்கள் தோன்றினால், அடிக்கடி உடலைத் தூய்மையான நீரில் சுத்தம் செய்வது, திட்டுக்களின் மீது காலமைன் (calamine) லோஷன் தடவுவது ஆகியவற்றைச் செய்யலாம்.

அதே நேரம் அதிக வியர்வையால் நீர்ச்சத்து குறையாமல் பார்த்துக் கொள்வதும் அவசியம்.

### வியர்க்குரு

கோடையில் வியர்க்குருவினால் சற்றே வளர்ந்த குழந்தை அவதிப்பட்டால், அவர்களை மேலாடை இல்லாமல் இருக்க விடாதீர்கள். சொரிந்து கொண்டு மேலும் ரணமாகலாம். மாறாகப் பருத்தி பனியனை அணிவித்தால், அது வியர்வையை உறிஞ்சும். வியர்க்குருவினால் ஏற்படும் அரிக்கும் உணர்வு

குறையும். ஆனால், தினமும் மூன்று முறை பனியனை மாற்றுங்கள்.

**வலியுடன் கூடிய வெப்ப இழுப்பு (painful heat cramps)**

வெளியில் வெயிலில் விளையாடும் குழந்தைகளுக்கு, இது உண்டாக அதிக வாய்ப்பு உண்டு. சோடியம், பொட்டாஷியம் போன்ற எலெக்ட்ரலைட்கள் உடலிலிருந்து அதிகமாக இழக்கப்படும்போது, இப்படித் தோன்றும். மோர், ஜூஸ், உப்பு கலந்த நீர் ஆகியவற்றைக் கொடுத்து தவிர்க்கலாம்.

**வெப்ப வாதம் (sun stroke)**

வெப்பத்தால் உண்டாகும் மிக அதிகத் தாக்குதல் இது. உப்பு சர்க்கரை கலந்த நீர்க் கரைசலை உடனடியாக அளிக்க வேண்டும். எலக்ட்ரால் போன்றவற்றைக் கொடுக்கலாம்.

தாக்க வாய்ப்பு உண்டு. தடுப்பூசி போட்டிருக்கவில்லையென்றால், போட்டு விடுங்கள்.



# வாடாமலரும் வாட்டும் வெயிலும்

குழந்தைகள் என்றால் ஒரு நாளைக்கு ஒரு லிட்டர் தண்ணீரும், பெரியவர்கள் என்றால் தினமும் இரண்டரை லிட்டர் தண்ணீரும் குடித்து இந்த வாதத்திலிருந்து பாதுகாத்துக் கொள்ளலாம்.

**அம்மை**

மணல்வாரி அம்மை, சின்னம்மை போன்றவை நவம்பரிலிருந்து ஜூன் மாதம் வரை அதிக அளவில் குழந்தைகளைத்

**மலச்சிக்கல்**

தாய்ப்பால் குடிக்கும் குழந்தைகளுக்கு கோடையில் அதிக அளவு தாய்ப்பால் அளிக்கப்பட வேண்டும். போதிய அளவு தாய்ப்பால் அளிக்கவில்லையென்றால், அதனால் மலச்சிக்கல் ஏற்படலாம்.

போதிய முன்னெச்சரிக்கையுடன் இருந்தால் கோடையினால் உண்டாகும் ஆபத்துகளிலிருந்து குழந்தைகளைப் பெருமளவு பாதுகாக்க முடியும்.''

# வாமனதேசங்கள்

## 19




அது ஒரு காலம். வல்லரசுகள் என்றால் அமெரிக்காவும் சோவியத் யூனியனும்தான். எந்தப் பிரச்னையிலும் நேர் எதிர்க் கருத்துகள். எந்தவொரு நாடும் இவற்றில் ஒன்றிற்கு ஆதரவு அளிப்பது என்பது, இன்னொன்றை எதிர்ப்பதற்குச் சமமாகவே கொள்ளப் பட்டது. பனிப்போர் எப்போது நிஜப் போராக வெடிக்குமோ என்ற கிலி நிலவியது.

இந்த நிலையில் உண்டானது ஒரு திருப்புமுனை. 1989-ல் அமெரிக்க அதிபர் ஜார்ஜ் புஷ்ஷும், சோவியத் தலைவர் மிகைல் கோர்பசேவும் ஒரு நாட்டில் சந்தித்துப் பேசினார்கள். உலகையே அச்சுறுத்திக் கொண்டிருந்த அமெரிக்க ரஷ்ய பனிப்போர் முடிவின் முதல் திருப்பமாக அது அமைந்தது. அவர்கள் சந்தித்த நாடு மால்டா. நடுநிலைமை காட்டி அணிசேரா நாடுகளில் ஒன்றாக விளங்கியது மால்டா.

ஐரோப்பாவின் மிகச் சிறிய நாடுகளில் ஒன்று மால்டா. அதேசமயம், ஐரோப்பாவின் மிக அதிக மக்கள் தொகை நெருக்கம் உள்ள நாடு. இத்தாலியத் தீவான சிசிலிக்கருகே உள்ளது. பல தீவுகள் கொண்டது என்றாலும், மூன்றில் மட்டுமே மக்கள் வசிக்கிறார்கள். அவை மால்டா தீவு, கோஸோ மற்றும் கோமினோ. வேறொரு விதத்தில் சொல்வதானால், யூரேசியாவை ஆப்ரிக்கா சந்திக்கும் இடத்தில் உள்ளது மால்டா. மத்திய தரைக் கடலில் அமைந்த நாடு.

மிக நீண்ட காலச் சரித்திரம் கொண்ட நாடு. அதுவும் கிறிஸ்தவ மதத்தோடு பின்னிப் பிணைந்த தேசம். 'மெலைட்' என்று பைபிளில் குறிப் பிடப்படும் பகுதி மால்டாதான் என்று பல சரித்திர ஆராய்ச்சியாளர்களும்



ஜி.எஸ்.எஸ்.

# விவாகரத்து... நோ சான்ஸ்!



ஒப்புக்கொள்கிறார்கள். ஏசுநாதரின் நேரடி சீடர்களில் ஒருவரான தூய பால், பயணம் செய்த கப்பல் இங்கு தரைதட்டியது. தொடர்ந்து இங்கு அவர் பல அற்புதங் களைச் செய்தாராம். அவற்றில் ஒன்று, மால்டாவிலுள்ள அனைத்துப் பாம்புகளை யும் அவர் வெளியேறச் செய்தது. தூய மரிஜா அஸுன்டா என்பவருக்கான மாதா கோயிலின் மேற்கூரை மிகப் பெரிது. இரண்டாம் உலகப் போரின்போது, இப்பகுதியில் வெடிகுண்டு வெடிக்கப் பட்டபோதும், அந்த மேற்கூரை சேத மடையவில்லை.

கி.மு. 3000-ல் கட்டப்பட்ட ஆல யங்களின் மிச்சங்கள் இப்போதும் உள் ளன. அதில் பலி கொடுக்கும் பழக் கம் இருந்ததைக் கண்டுபிடிக்க முடி கிறது. இந்த வாமன தேசத்தில் 360-க்கும் அதிகமான மாதாகோயில்கள் உள்ளன.

நாட்டில் மிக அதிகமாக உள்ளவர் கள் கத்தோலிக்கர்கள். இவர்களின் நடைமுறைகளே சந்தேகமின்றி நெடு நாட்களாக மால்டாவில் ஏற்கப்பட்டு வருகின்றன. விவாகரத்து செய்ய அனு மதி இல்லை. கருச்சிதைவும் சட்ட மீறல்.

ஒரு காலத்தில் யூதர்களும் இங்கு கணிசமாக இருந்தார்கள். ஆனால் 1492-ல் அவர்கள் வெளியேற்றப்பட, மால்டாவிலேயே தங்க விருப்பப்பட்ட பல யூதர்களும் கிறிஸ்தவ மதத் துக்கு மாறிவிட்டனர்.

இதற்கு நேர்மாறான நிகழ்வுகளை யும் மால்டா கண்டுள்ளது. இடி அமீனின் கொடுங்கோல் ஆட்சியைப் பொறுத்துக் கொள்ளாமல், உகாண்டா விலிருந்து வெளியேறி வந்தவர்களுக் கும், சதாம் உசேன் ஆட்சி பொறுக்கா மல் இராக்கிலிருந்து வெளியேறி வந்த வர்களுக்கும் மால்டா தஞ்சம் அளித் திருக்கிறது.

கிரேக்க வார்த்தையான 'மேலி' என் பதிலிருந்துதான் மால்டா என்ற வார்த்தை வந்திருக்க வேண்டும். (கி.மு.700-ல் மால்டாவை கிரேக்கர்

களும் ஆண்டதுண்டு). அந்த மொழியில் மேலி என்றால் தேன் என்று பொருள்.

கிரேக்கர்கள் மட்டுமல்ல, உலகில் கோலோச்சிய பல்வேறு சாம்ராஜ்ஜியங்களும் ஏதாவதொரு காலகட்டத்தில் மால்டாவிலும் கால் பதித்து ஆண்டிருக்கின்றன.

காரணம், மால்டா இருந்த இடம் மிக அற்புதமானது. ஜிப்ரால்டருக்கும் சூயஸ் கால்வாய்க்கும் இடையே இருந்தது. இந்தியாவை அடைவதற்குமுன், கப்பலில் செல்லும் வணிகர்கள் கொஞ்சம் ஓய்வெடுத்துச் செல்ல அது சரியான நிறுத்தமாக இருந்தது.

இரண்டாம் உலகப் போரின்போது, தங்களுக்கு ஆதரவாகக் களத்தில் இறங்கிய மால்டா நாட்டு வீரர்களின் தைரியத்தில் மனம் கசிந்தார் மன்னர் ஆறாம் ஜார்ஜ். அதற்குப் பரிசாக மால்டாவுக்கு ஒரு சிலுவையை அன்பளிப்பாகத் தந்தார். அந்தச் சிலுவையில் உருவம் அந்த நாட்டின் கொடியிலும் பின்னர் இடம் பெற்றது.

செப்டம்பர் 21, 1964 அன்று மால்டா சுதந்திரம் அடைந்தது. எனினும், பத்து வருடங்களுக்குப் பிறகே அது குடியரசானது.

மால்டாவில் நிரந்தரமான நதியோ, ஏரியோ கிடையாது. தண்ணீர் சப்ளை எப்போதுமே மால்டாவுக்கு ஒரு பிரச்னையாகவே இருந்து வந்திருக்கிறது. அதிகச் செலவில் கடல்நீரைக் குடிநீராக மாற்றிச் சமாளிக்கிறார்கள்.

திருமணத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கும் மால்டா, குழந்தைகளுக்கு அதைவிட முக்கியத்துவம் கொடுக்கிறது. குழந்தை இல்லாத வாழ்க்கை வீண் என்ற சித்தாந்தம் உண்டு. அங்கு நிலவும் வழிவழிக் கதைகளில் பலவும் 'அவர்கள் வாழ்ந்தார்கள், குழந்தைகளும் பிறந்தன'





என்பதோடு முடியும்.

ஸ்கேனிங் வசதி உண்டுதான் என்றாலும், வேறொரு பரம்பரை முறையின் மூலம் குழந்தை ஆணா பெண்ணா என்பதைக் கண்டுபிடிக்கிறார்கள்(?). திருமண மோதிரத்தை ஒரு மெல்லிய கயிற்றில் கட்டி, தாயின் வயிற்றுப் பகுதிக்கு நேரே ஆட்டுவார்கள். அந்த மோதிரம் பக்கவாட்டில் நகர்ந்தால் பெண் குழந்தை. முன்னும் பின்னுமாக நகர்ந்தால் உள்ளே இருப்பது ஆண் குழந்தை.

குழந்தையின் முதலாம் ஆண்டு நிறைவடையும்போது அதைச் சுற்றிலும் பல



**ஏசுநாதரின் சீடர் தூயபால் மால்டாவிலுள்ள அனைத்துப் பாம்புகளையும் வெளியேறச் செய்தார்.**

பொருள்களைப் பரப்பி வைப்பார்கள். பைபிள், கதைப் புத்தகம், காய்கறி, மருந்து இப்படிப் பல பொருள்கள். குழந்தை எதை முதலில் தொடுகிறதோ அந்தத் துறையில்தான் அதன் வருங் காலம் இருக்கும் என்ற பலமான நம் பிக்கை உண்டு. எடுத்துக்காட்டாக, பணத் தைத் தொட்டால் பணக்காரனாவான். புத்தகத்தைத் தொட்டால் மேதையாக விளங்குவான். இந்த நாகரிகக் காலத்தி லும் இப்படி இந்த சீரியஸ் விளையாட்டு தொடருகிறது - கால்குலேட்டர், கணினி போன்ற புதிய பொருள்களோடு.

## பாஸ்போர்ட் வேண்டாம்!

- மால்டாவில் சொத்து வரி கிடை யாது.
- 2008 வரை மால்டிஸ் லிராதான் நாணயம். அதற்குப் பிறகு யூரோ.
- ஐரோப்பிய தேசத்தைச் சேர்ந்த யாருமே விசா அல்லது பாஸ்போர்ட் இன்றி மால்டாவில் நுழையலாம். அடை யாள அட்டை போதுமானது.
- கானா பிரபலம். மால்டாவைப் பொறுத்தவரை கானா என்பது இசைவழி யாக ஒரு பட்டிமன்றம்.
- தேசிய விளையாட்டு கால்பந்து.
- தலைநகரம் வால்லெட்டா என்றா லும், நாட்டின் முக்கிய நகரம் பிர்கிர்காரா.
- முதன் முதலில் மால்டாவில் தொழிற்சங்கம் அமைத்தது யார் தெரி யுமா? ஆசிரியர்கள்தான்.
- மின்னணுப் பொருள்கள், கப்பல் கட்டுதல், சுற்றுலா ஆகியவைதான் மால்டாவின் பொருளாதாரத்தைத் நிர்மா ணித்து வருகின்றன.
- ஆங்கிலமும் மால்டீஸும் ஆட்சி மொழிகள்.
- பேருந்துதான் முக்கிய போக்கு வரத்து. முழுக்க தனியார்வசம். பெரும் பாலும் ஓட்டுநர்களே, வண்டியின் உரிமையாளர்களாகவும் இருக்கிறார்கள். எந்த நேரத்தில் புறப்பட வேண்டும் என் பதை மட்டும் அரசு முடிவு செய்கிறது.
- பாப்ஐ, கிளேடியேட்டர், ட்ராய் போன்ற பல புகழ்பெற்ற படங்களின் படப்பிடிப்பு மால்டாவில் நடைபெற்றுள் ளது.
- (தேர்தலில் வாக்களிப்பது கட்டா யம் எனப்படும் நாடுகளை விட்டுவிட் டால்) வாக்களிப்பு சதவிகிதம் உலகி லேயே மால்டாவில்தான் அதிகமாம்.

**(அடுத்து கால்வாயால் 'கட்' ஆன நாடு)**

# தாகம்! தண்ணீர்!

"**நி**றையத் தண்ணீர் குடிப்பது நல்லது". இது பொன்மொழி. அதுவும் கோடைக் காலத்தில், அதையும் தாண்டிய ப்ளாட்டின மொழி! ஆனால் நி..றை..ய..த் தண்ணீர் குடிப்பதில் உள்ள ஆபத்துகள் பற்றித் தெரியுமா?



அதைப் பார்ப்பதற்கு முன் தண்ணீர் நமக்கு ஏன் தேவைப் படுகிறது என்பதை மேலும் தெளிவாக அறிந்து கொள் வோமே.

நம் எலும்பு மூட்டு உலர்ந்து போகக் கூடாது. தோல் உலர்வது நல்லது அல்ல. இதற் கெல்லாம் தண்ணீர் வேண்டும். நுரையீரலும் வாயும் கொஞ்சம் ஈரமாகத்தான் இருக்க வேண்டும். சிறுநீரகப் பையில் பாக்டீரியா தங்கக் கூடாதென்றால், அவற்றை ஃப்ளஷ் செய்ய, தண்ணீர் தேவை. இப்படிப் பல விதங்களிலும் நம் உடலுக்குத் தண்ணீர் தேவைப்படுகிறது.

தினமும் சுமார் இரண்டரை லிட்டர் தண்ணீரைப் பல விதங்களில் நாம் இழந்து கொண்டு வருகிறோம். கோடைக்காலத்தில் இன்னும் அதிகமாக. எனவே தினமும் குறைந்தது ஒன்றரை லிட்டர் தண்ணீராவது நாம் குடிக்க வேண்டும் (சாம்பார், ரசம், காப்பி இப்படிப் பலவிதங்களில் சுமார் ஒரு லிட்டர் தண்ணீர் சேர்ந்துவிடுகிறது).

நம் உடலில் பொதுவாக 47 லிட்டர் தண்ணீர் இருக்கிறது. தசைகளில் முக்கால் வாசி தண்ணீர்தான். கல்லீரலில் 70 சதவிகி தம் தண்ணீரே. ஒருவேளை சிறுநீரகத்தில் 83 சதவிகிதம் தண்ணீர் என்பது உங்களுக்கு வியப்பை ஏற்படுத்தாமல் இருக்கலாம். ஆனால் மூளையில் 79 சதவிகிதம் நீர்தான் என்பது...?

எனவேதான் உடலில் தண்ணீர்ச் சத்து குறையும்போது தாகம் எடுக்கிறது.

நம் உடலில் உள்ள உப்பு, சர்க்கரை ஆகிய இரண்டும் ஒரு குறிப்பிட்ட விகிதத்தில் உள்ளன. ஏதோ காரணத்தால் இந்த விகிதம் மாறி உப்பின் அளவு (தண்ணீரோடு ஒப்பிடு கையில்) அதிகமானால், தாகம் எடுக்கும்.

நம் மூளையில் 'தாக மையம்' (thirst centre) என்ற ஒரு பகுதி உண்டு. இது நம் ரத்தத்தில் உள்ள உப்பின் அளவைக் கண்காணித்துக் கொண்டே இருக்கும். உப்பின் சதவிகிதம் அதிகமானால், உடனே தொண்டையின் பின்பக்கத்தில் உள்ள நரம்புகளுக்கு இந்தத் தகவலை தெரிவிக்கும். அந்தத் தகவல் மூளையை எட்டும். இப்படி தகவல் பரிமாற்றங்கள் நடக்கும்போதுதான் நாம் தாகத்தை உணர்கிறோம்.

**ச**ரி, தொடக்கத்தில் அதிகத் தண்ணீர் குடித்தால் ஆபத்து என்பதுபோல் பயமுறுத்த லாமா என்று கேட்டால்... என்ன செய்வது? கலிபோர்னியாவில் நடந்த ஒரு விஷயம் நினைவுக்கு வருகிறதே. ஜெனிஃபர் என்ற ஒரு பெண்மணி அதிகம் தண்ணீர் குடிக்கும் போட்டியில் ஈடுபட்டார். தலையெல்லாம் என்னவோ போல் இருக்கிறது என்று முனகியபடி வீட்டுக்குச் சென்றார். இறந்து விட்டார்.

அவர் உடலைப் பரிசோதனைக்கு உட் படுத்தியபோது, தண்ணீர் காரணமாகத்தான் அவர் இறந்தார் என்று முடிவெடுத்தனர் மருத்துவர்கள். அளவுக்கு மிஞ்சினால் தண்ணீரும் விஷமா?

ஏன் இப்படி? மிக மிக அதிகமான

தண்ணீரை ஒரே சமயத்தில் குடித்தால், முற்றுமதியாகும் வேகத்தில் அது இறக்குமதி ஆகாது. அதாவது சிறுநீரகங்களால் அத்தனை அதிகப்படியான நீரையும் வெளியேற்ற முடிவதில்லை. எனவே உடலில் நீரின் அளவு அதிகமாகிறது. ரத்தம் நீர்த்துப் போகிறது. இவ்வளவு நீருக்கு இவ்வளவு ரசாயனப் பொருள் என்று உடம்பு வைத்திருக்கும் விகிதக் கணக்கு மாறிவிடுகிறது. செல்களில் உள்ள உப்பின் அளவைவிட, ரத்தத்தில் உள்ள உப்பின் அளவு அதிகமாகி விடுகிறது. ரத்தம் தன்னிடமுள்ள மிகுதியான நீரை செல்களுக்கு அனுப்பி வைக்

# ...அளவு!!!

கிறது. தேவையான அளவைவிட அதிக நீர் சேர்வதால் செல்கள் வீங்குகின்றன.

அதிகமான நீரினால் மூளையும் வீக்கமடையும்போது, மண்டை ஓட்டில் அழுத்தம் அதிகமாகிறது. தலைவலியிலிருந்து பல விபரீதங்கள் உண்டாகின்றன.

**இதற்காகத் தண்ணீர் குடிப்பதற்கு ரேஷன் தேவை இல்லை. தாகம் எடுக்கும் போது குடியுங்கள். கோடையில் அதிகமாவே குடியுங்கள். ஒரே சமயத்தில் மிக மிக அதிகமாகக் குடிக்க வேண்டாம். முதியவர்கள் இந்த விஷயத்தில் மேலும் கவனமாக இருங்கள்.**

ஒரு மணி நேரத்துக்கு ஒருமுறை சிறுநீர் கழிந்து, அந்த சிறுநீர் மிகவும் தெளிவாகவும் இருந்தால், அது தண்ணீரை நீங்கள் மிக அதிகமாகக் குடிக்கிறீர்கள் என்பதைக் குறிக்கிறது. இது ஒரு பிரிட்டிஷ் மருத்துவரின் கருத்து.

## மினரல் வாட்டர்

- பொதுவாக ஊற்றுகளிலிருந்தோ நதிகளிலிருந்தோதான் இவை எடுக்கப்படும். மினரல் வாட்டரில் இயற்கை கனிமங்கள் (minerals) உள்ளன.
- சில சமயம் மினரல்கள் சேர்க்கப்படுவதும் உண்டு. எதற்காகத் தண்ணீரில் மினரல்கள் சேர்க்கப்பட வேண்டும்? தண்ணீர் சுவையாக இருக்கவும் சில மருத்துவக் குணங்களைக் கொண்டிருக்கவும்தான்.
- பலவித உப்புக்கள் மற்றும் சல்ஃபர் சத்துக்கள்தான் தண்ணீரில் சேர்க்கப்படுகின்றன.
- உலகெங்கும் மூவாயிரத்துக்கும் அதிகமான ப்ராண்ட்களில் மினரல் வாட்டர் விற்கப்படுகிறது.





குழந்தைகள் கேட்கும். முணுமுணுத்துக் கொண்டே தங்களுக்குமாகச் சேர்த்து வாங்கிக் கொள்வார்கள் பெரியவர்கள். பார்ட்டியோ, திருமண வரவேற்புகளோ, ஐஸ்க்ரீம் அவசியம் இடம்பெறுகிறது. கோடையில் ஐஸ்க்ரீம் விற்பனை வெப்பத்தோடு சேர்ந்து உயரும்!

பலரின் மனம் கவர்ந்த 'நாயகனான' ஐஸ்க்ரீமை 'நீங்க நல்லவரா? கெட்டவரா?' என்று கேட்டால், 'தெரியலப்பா' என்று கமல் போலவே பதிலளிக்கலாம்!

ஐஸ்க்ரீம் சாப்பிடுவதால் ஜலதோஷம் பிடிப்பதில்லை. ஆனால் ஜலதோஷம் பிடித்தவர்கள், ஐஸ்க்ரீம் சாப்பிட வேண்டாம் என்கின்றன மருத்துவ அறிக்கைகள்.

'கால்ஷியம் எலும்புகளுக்கு மிகவும் தேவைப்படுகிறது. இரத்த அழுத்தத்தைக் கட்டுக்குள் கொண்டு வரவும் கால்ஷியம் உதவுகிறது. சிறுநீரகத்தில் கற்கள் உண்டாவதை அது தடுக்கிறது

# ஜில்லாலஜி!




என்கிற தகவல்கள் குழந்தைகளுக்கு உற்சாகத்தை ஏற்படுத்தாது.

ஆனால், இதையெல்லாம் சொல்லிவிட்டு 'ஐஸ்க்ரீமில் நிறைய கால்ஷியம் சத்து இருக்கிறது' என்று சொல்லி அவர்களின் முகங்களைப் பாருங்கள் 'அடடா, நம்மை அதிக ஐஸ்க்ரீம் சாப்பிடாமல் கட்டுப்படுத்தும் பெற்றோருக்கு எடுத்துச் சொல்ல சரியான வாதம்' என்று விழிகள் மலரும்!

நடுத்தரவயதினர் சாப்பிடுவது குறைந்த கலோரிகள் கொண்ட ஐஸ்க்ரீமாக இருப்பது நல்லது. மருத்துவர்கள் ஐஸ்க்ரீமின் வேண்டாத குணங்களைப் பட்டியல் இடுகிறார்கள்.

சர்க்கரை நோய்க்காரர்கள் ஐஸ்க்ரீம் உட்கொள்வதைத் தவிர்க்க வேண்டும். தவிர, அதிக அளவு ஐஸ்க்ரீம் சாப்பிட்டால் அதிக எடை சேர்வது, சைனஸ் பிரச்னை, டான்சில்ஸ் பிரச்னை, குரல் பாதிப்பு ஆகியன உண்டாகலாம்.

ஐஸ்க்ரீம் அதிகம் சாப்பிடும்போது, அதில் உள்ள கொழுப்புச் சத்து உடலில் உள்ள ரத்தக் குழாய்களில் படிகிறது. இதன் காரணமாக அந்த ரத்தக்குழாய்களின் விட்டம் குறைகிறது. ரத்தக்குழாய் இப்படிச் சுருங்கி விடுவதால் இதயம், மூளை போன்றவற்றிற்கு செல்லக்கூடிய ரத்தம் குறையக்கூடும்.

சுத்தமான நீரில் தயாரிக்கப்படாத ஐஸ்க்ரீம் என்றால், நோய்த்தொற்றுக் கிருமிகள் நம் உடலுக்குள் சென்று பாதிப்பை ஏற்படுத்தக் கூடும். ஐஸ்க்ரீம் தொண்டைக்குள் இறங்கும் போது ஏற்படும் ஜில் என்ற உணர்வு, அது தாகத்தைப் போக்குவது போன்ற உணர்வைச் சில நொடிகள் ஏற்படுத்துகிறது. ஆனால் இது ஒரு மாயை. தாகத்தை ஐஸ்க்ரீம் போக்குவதில்லை.

ஐஸ்க்ரீம் சாப்பிட நேர்ந்தால், அதைத் தொடர்ந்து தண்ணீர் அருந்துங்கள். முடிந்தால் வெதுவெதுப்பான வெந்நீர். இதனால் ஐஸ்க்ரீம் குளிர்ச்சியால் ஏற்படக்கூடிய தொண்டைப் பாதிப்புகள் பெரும்பாலும் நீங்கி விடுகின்றன.



# டயர் பஞ்சர்... அக்குபஞ்சர்

● **கு.ராமசாமி, ஈரோடு**

**கொடியவர்களான துரியோதனனுக்கும் அவன் சகோதரர்களுக்கும் 'கௌரவர்கள்' என்ற அடைமொழி பொருத்தம்தானா?**

மண்ணாசையால் போரிட்டு மண்ணைக் 'கவ்வுரவர்கள்' அவர்கள்!

● **எம்.மிக்கேல் ராஜ், சாத்தூர்**

**தர்ம அடி என்றால் என்ன?**

தன்னை விட தர்மத்தில் உயர்ந்தவன் எவனும் கிடையாது, என்ற கர்வத்தில் இருந்த 'மகாபலி சக்கரவர்த்தியின்' தலையில், மகாவிஷ்ணு வாமனனாக வந்து மூன்றாவது அடியை வைத்து அவனை பாதாளத்துக்கு தள்ளியது 'தர்ம அடி'. பணம் பாதாளம் பாயுமா? என்று பலர் கேள்வி கேட்டிருக்கிறார்கள். கர்வமாகக் கொடுக்கும் தர்மம் அதாவது பணம் பாதாளம் பாயும்!

● **த.சத்தியநாராயணன், அயன்புரம்**

**தாலாட்டு, பாராட்டு என்ன வித்தியாசம்?**

குழந்தையை தூங்க வைக்கத் தாலாட்டு. பாராட்டு பெரியவர்களை தூங்க வைக்க!

● **எஸ்.கோபாலன், நங்கநல்லூர்**

**வரவு எட்டணா... செலவு...?**

இப்ப இருக்குற வெலவாசில எட்டணா வரவுல எந்த செலவும் எட்டாதுண்ணா....!

● **மஞ்சு வாசுதேவன், அயிரோலி**

**எமலோகத்தில் சித்திர குப்தனுக்கு கணக்கு எழுதி போரடித்தால் என்ன செய்வார்?**

எமனோடு பேசி அவன் உயிரை வாங்குவார்!

# ின்ன வித்தியாசம்

## கிரேசியைக் கேளுங்கள்



● **பா.அசோக், திருவில்லிப் புத்தூர்**

***வாலிபக் காதல், வயோதிகக் காதல் எது சிறந்தது?***

வாலிபத்தில் 'காதலென்ன கத்திரிக்காயா' வயோதிகத்தில் 'என்ன புடலங்கா காதல் வேண்டிக் கிடக்கு'!

● **இ.ராஜலட்சுமி, ஹரப்பள்ளி**

***ஆசிரியப்பா போல 'மாணவப்பா' என்று யாரும் எழுதவில்லையே. ஏன்?***

அட 'போங்கப்பா'!

● **எடக்காடு பீ.சேகர், ஊட்டி**

***சம்பந்தமில்லாத டயர்-பஞ்சர், அக்கு-பஞ்சர் இரண்டிலும் எப்படி பஞ்சர் வந்தது....?***

இந்தக் குழப்பத்தைத் தவிர்க்கத்தான் 'அக்கு வேறு, டயரை பஞ்சராக்கிய ஆணி வேறு' என்று சினத்துப் பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள்!

● **ச.ராஜசேகர், செய்யாறு**

***முட்டாள்கள் தினம் ஏப்ரல் ஒன்று. அறிவாளிகள் தினம்?***

அக்டோபர் பதினாறு என்று தினத்தை மட்டும் சொல்ல முடியும். வயதை சொல்லக் கூடாது என்பதால் வருடத்தைச் சொல்ல வில்லை.!

● **எம்.அசோக்ராஜா, திருச்சி**

***உங்கள் பார்வையில் ஆயிரத்தில் ஒருவர் யார்?***

நாலாயிரத்தில் ஒருவரான நம்மாழ்வார்!

● **ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி**

***எது பரிதாபம்... எது அனுதாபம்?***

பரிதாபமாக நின்ற ராவணனைப் பார்த்து அனுதாபமாகச் சொன்னார் ராமர் 'இன்று கேள்விக் குறியாக நிற்கிறாய்... போய் நாளை நல்ல பதிலோடு வா'!

● **ஜி.பாலசுப்ரமணியன், விருது நகர்**

***கிளி ஜோசியம் பார்த்ததுண்டா?***

எனக்கு ஜோசியம் என்றாலே கிலி!

● **மாலதி, விழுப்புரம்**

***நாக்கில் நரம்பிருந்தால்?***

அது சரஸ்வதியின் கையிலுள்ள வீணை நரம்பு. காளிதாசனும், காளமேகமும், கம்பனும் கவி பாடியது அந்த நரம்பை மீட்டித்தான்!

● **ச.ஆ.கேசவன், இனாம் மணியாச்சி**

***பகல் தூக்கம், இரவுத் தூக்கம் என்ன வேறுபாடு....?***

பகலில் நமக்கு தூக்கம். இரவில் தூக்கம் நமக்கு!



அன்டார்டிக்காவில் வசிப்பவரிடம் 'அங்கே சம்மர் எப்படி? ஜாலியா இருக்குமே! வெட்டவெளிகளில் நின்னுக்கிட்டு வெயிலை ரசிப்பீங்களாக்கும்!' இப்படியெல்லாம் கேட்டு விடாதீர்கள்.

''வேணாம். இப்படிக் கேக்காதீங்க. நான் அழுதுடுவேன்'' என்று வடிவேல் மாதிரியான ஒரு பதில்தான் உங்களுக்குக் கிடைக்கும். அன்டார்டிக்காவின் சம்மர் ஆரோக்கியக் கேடுகள், மிகவும் பனி படர்ந்த பல பகுதிகளுக்கும் பொருந்தும்.

சில வருடங்களுக்கு முன் இருபத்தொன்பது நபர்கள் கோடையில் அன்டார்டிக்கா சென்று வந்தனர். அவர்களின் உடலில் நோய் எதிர்ப்பு சக்தி எந்த அளவுக்கு மாறுபடுகிறது என்பதற்கான ஆராய்ச்சி ஒன்று நடைபெற்றது. இதற்காக அவர்கள் அன்டார்டிக்கா செல்வதற்கு முன், அங்கு வசித்தபோது, அங்கிருந்து திரும்பியபின் என்று மூன்று கட்டங்களாகப் பலவித ஆராய்ச்சிகளுக்கு உட்படுத்தப்பட்டனர்.

இதன்படி அன்டார்டிக்கா சென்று வந்தவர்களின் நோய் எதிர்ப்பு சக்தி 21 சதவிகிதம் குறைந்திருந்ததாம். தோலுக்குக் கீழே உள்ள ரத்த ஓட்டத்தில் (cutaneous blood flow) அதிக மாற்றமில்லை. மற்றபடி எந்தவித நோயினாலும் அவர் கள் உடல் பாதிக்கப்படவில்லை. ஆனால் மனநலம் தற்காலிகமாகப் பாதிக்கப்பட்டது. தனிமை காரணமாக இது ஏற்பட்டிருக்கலாம்.

அமெரிக்காவில் உள்ள 'நாசா' அமைப்பு ஒரு விண்வெளி ஆராய்ச்சி நிறுவனம்தான் என்றாலும், அன்டார்டிக்கா ஆராய்ச்சியை அடிக்கடி செய்து வருகிறது.

# பனிக்

காரணம், சில விஷயங்களில் அன்டார்டிக்காவும் விண்வெளியும் ஒன்றுதான். தாக்குப்பிடிப்பது கஷ்டம். அன்டார்டிக்காவில் தாக்குப்பிடித்துவிட்டால் விண்வெளியிலும் தாக்குப்பிடிக்க அதிக வாய்ப்பு.

மிக வித்தியாசமான வெப்ப நிலையில்,



னித உடல் எந்தவிதமான மாறுதலுக்குள்ளாகிறது என் பது தொடர்பான மருத்துவ ஆராய்ச்சி, அன்டார்டிக்கா போன்ற இடங்களில் தொடர்ந்து வருகிறது.

அதுவும் மக்கள் வசிக்குமிடத்தியிருந்து மிகவும் தள்ளியிருக்கும் பகுதி அன்டார்டிக்கா (மிக அருகில் உள்ள நகரம் என்பதே ஆயிரம் மைல்களுக்கு அப்பால்தான்). உலகின் மிகக் குறைவான வெப்பம் இங்குதான் (சமயத்தில் மைனஸ் 128 டிகிரி ஃபாரன்ஹீட் கூட உண்டு).

1920-களில் அமெரிக்கரான அட்மிரல் ரிச்சர்ட் பைர்ட் என்பவர் அன்டார்டிக்கா சென்றபோது, தம்முடன் கல்லறைப் பெட்டி ஒன்றையும் எடுத்துச் சென்றாராம்!



# கேரண்ட

அங்கு சென்ற பலரும் மனநிலை சரியில்லாது போயிருக்கிறார்கள். வருடத்தில் பாதி நாட்கள் அன்டார்டிக்காவில் குளிர் காலம்தான். சில பகுதிகளில் ஒன்பது மாதங்கள் கூட இது நீடிக்கும். அப்போது அங்கு வசிப்பது மிகமிகக் கஷ்டம்.

தூக்கம் வராத நிலை அன்டார்டிக்காவில் மிக சகஜம். இன்சோம்னியா எனும் இந்த நிலையை எப்படிச் சரிசெய்யலாம் என்பது மருத்துவர்களுக்கு இன்னும் புரியவில்லயாம்.

பாக்டீரியா அதிகக் குளிரில் உயிருடன் இருப்பதில்லை என்பது ஓர் ஆறுதல். ஆனால் பல்லிலுள்ள எனாமல், இந்தக் கடும் குளிர்ப்பிரதேசங்களில் அடிக்கடி உதிர்ந்து விடுகிறது. எனவே பல் வைத்தியர்களின் உதவி அங்கு அதிகம் தேவைப்படுகிறது.

உலகின் உயரமான பகுதிகளில் ஒன்றாக அன்டார்டிக்கா விளங்குவதால், மலைகளில் நேரக்கூடிய தலைவலி, தலை கிறுகிறுப்பு, வாந்தி வரும் போக்கு, வேகமான மூச்சிரைப்பு ஆகியவை அன்டார்டிக்காவில் வசிப்பவர்களுக்கும் காணப்படுகின்றன. ●



# சூட் அணிந்த பிசாசுகள்!

ஆங்கில இலக்கிய உலகத்தில் அருந்ததி ராய், விக்ரம்சேத் போன்ற இந்தியப் படைப்பாளிகள் உலக சாதனைகள் படைத்து வருவதைத்தொடர்ந்து, கடந்த சில ஆண்டுகளாக ஆங்கிலப் புத்தகங்களை நேசிக்கும் இந்திய வாசகர்களுக்காகவே நிறையப் புத்தகங்கள் வரத்தொடங்கின. அவைகளின் ஆசிரியர்களில் அதிகம் பேசப்படுபவர் ரவி சுப்பிரமணியன். இரண்டாண்டுகளுக்கு முன் இவரின் முதல் புத்தகம் ''கடவுள் ஒரு பாங்க்கராக இருந்திருந்தால்..'' (if God was a Banker) ஒரு லட்சத்திற்குமேல் விற்பனையாகியிருக்கிறது. 'தங்க இறகு' பரிசையும் பெற்றிருக்கிறது. இரண்டு துடிப்பான இளைஞர்கள் ஒரே நாளில் இந்தியாவிலிருக்கும் வெளிநாட்டு வங்கியில் பணியில் சேருகிறார்கள். எப்படியாவது, எதையாவது செய்து உயரங்களைத் தொட்டுவிடவேண்டும் என்று ஒருவரும், தன் திறமையை மட்டுமே நம்பித் தொடர்ந்து அயராது உழைக்கும் மற்றொருவரும் எப்படி உயருகிறார்கள். இறுதி நிலையில், ஒருவர் மட்டும் எப்படி ஜெயிக்கிறார் என்பது கதை. இதில் கதையைவிட சொல்லப்பட்ட விதம், விவரிக்கப்படும் காட்சிகள், இந்தியாவில் செயலாற்றும் அந்நிய வங்கிகளில் நடைபெறும் பலவிதமான விஷயங்களைத் தோலுரித்துக் காட்டுகிறது. அடுத்த எழுதிய ''நான் வாங்கிய துறவியின் ஃபெராரி''(கார்) புத்தகம் நல்ல விற்பனையிலிருப்பதைத் தொடர்ந்து, இந்த ஆண்டு தனது மூன்றாவது புத்தகத்தை வெளியிட்டிருக்கிறார் ரவி. பெயர் ''டெவில் இன் பின்ஸ்ட்ரைப்ஸ்'' (பின்ஸ்டிரைப் என்பது பெரும்பாலும் பாங்கர்கள் அணியும் மெல்லிய கோடுகளுடன் கூடிய சூட்), சூட் அணிந்த பிசாசுகள்' என்று சொன்னால் எளிதில் புத்தகப் தலைப்பு புரியும். இந்தப் புத்தகம், விற்பனையில் முதல் புத்தக விற்பனையையும் தாண்டிவிடும் என்கிறார்கள்.

கதைக்கான களத்துக்காக அதிக ஆராய்ச்சிகள் செய்ய வேண்டிய அவசியம் இல்லை எனச் சொல்லும் இவர், ஒரு வெளிநாட்டு வங்கியில் பணியாற்றும் ஒரு அதிகாரி. ''அப்படியானால் எழுதுவதில் எந்த அளவு சொந்த அனுபவம்?''

''எழுதியவையெல்லாம் நிகழ்ந்தவையில்லை. - தங்கள் வாழ்க்கையில் சந்திக்க நேர்ந்த சில நிகழ்ச்சிகளின் நீட்சிகள்தானே'' என்கிறார். ''நாவல்கள் எழுதுவதைவிடக் கடினமான, நான் சாதிக்க விரும்பும் ஒரு விஷயத்துக்காக பயிற்சி எடுத்துக் கொண்டிருக்கிறேன்'' என்று இவர் சொல்லும் அந்த ஒரு விஷயம் - நல்ல சிறுகதைகள் எழுதுவது.

சந்திப்பும், படங்களும் : **ரமணன்**



ரவி சுப்பிரமணியன்

# கல்கி

Sri Palsani JEWELS

இணைந்து வழங்கும்

# கோடைக்கால கொண்டாட்டம்

## ஆறு வார அதிரடி போட்டி!

கல்கி வழங்கும் கோடைக்கால கொண்டாட்டம், அதிரடியான போட்டிகளோடும், அசத்தலான தங்கக் காசு பரிசுகளோடும் வருகிறது வாசகர்களே... அந்தந்த வாரம் ஸ்பெஷலை அடிப்படையாக வைத்தே போட்டிகள்...

இந்த வாரம் கோடைக்காலக் கொண்டாட்டத்தில் 'ஹெல்த் ஸ்பெஷல்' என்பதால் ஆரோக்கிய கோடையை அடிப்படையாகக் கொண்ட

**கோடைக்கால போட்டி - 4** இதோ...

*விதிமுறைகள்:*

வாசகர்களே! நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் இவைதான்.

- கல்கி வழங்கும் கோடைக்கால கொண்டாட்டம் ஆறு வாரப் போட்டி இந்த இதழோடு சேர்த்து ஆறு வாரங்கள் வெளியாகும். (போட்டி-1, மற்றும் போட்டி - 2, 3 முறையே மே 2, மே 9, மே 16 இதழ்களில் இடம்பெற்றன)
- ஒவ்வொரு வாரமும் வெளியாகும் போட்டிக்கான விடைகளை நிரப்பி, போட்டிப் பக்கங்களைக் கத்திரித்து பத்திரப்படுத்தவும். (81 - 82 பக்கம் முழுவதையும்).
- ஆறாவது வாரம் ஸ்பெஷல் போட்டியும் உண்டு.
- ஆறுவார போட்டிப் பக்கங்களை ஒன்றாக இணைத்து அனுப்ப வேண்டும்.
- ஆறு வாரப் போட்டிப் பக்கங்கள் வந்து சேரக் கடைசித் தேதி : **17.06.2010**
- சரியான விடை எழுதிய வாசகர்களுள், குலுக்கல் முறையில் தேர்வாகும் ஆறு அதிர்ஷ்டசாலிகளுக்கு, தலா கால் சவரன் தங்கக் காசு பரிசு.
- சரியான விடை எழுதி, ஸ்பெஷல் போட்டியின் அடிப்படையில் தேர்வாகும் ஓர் அதிர்ஷ்டசாலிக்கு ஒரு சவரன் தங்கக் காசு பரிசு.
- ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

**விடைகள்**

| | |
|---|---|
| 1 – | 4 – |
| 2 – | 5 – |
| 3 – | 6 – |





''எங்கள சாப்பிடத்தானே பலர் வளர்க்கறாங்க... அந்த கோபத்துல மூளை ஜுரம் பரவ நாங்களும் ஒரு காரணமாயிடுறோம். சாரி!'' **a**

# 1 சரியானதைப் பொருத்துக



**b** ''ப்ளஸ் மைனஸ் சேர்ந்ததுதான் வாழ்க்கை! நன்றிக்கும் நான் உதாரணம். ரேபிஸுக்கும் நான் காரணம்.'' **2**



''எங்களிலே பொண்ணுங்கதான் மோசம். உங்களுக்கு மலேரியா பரவக் காரணமாயிடறாங்க.'' **c**

**3**



**d** ''மூளையிலே ஏற்படும் பாதிப்பினாலே வலிப்பு வந்தால் அதுக்கு எங்க பெயரை எதுக்கு இழுக்கறீங்க?!'' **4**



''லெப்டோஸ்பைரோஸிஸ் என்கிற நோயாலே அவதிப்பட்டால் அந்தக் காய்ச்சலை என் பெயரோடு சேர்த்துச் சொல்றாங்க.'' **e**

**5**

**உருவாக்கம் : ஜி.எஸ்.எஸ்**



**f** ''ஹலோ, என்னுடையது ஆரோக்கியமான கால். ∴பைலேரியாவிலே உங்க கால் வீங்கிப் போனால் அதை என்னுடைய கால்னு சொல்லி அவமானப்படுத்தாதீங்க.'' **6**



## கோடைக்காலப் போட்டி - 4

பெயர் : ..............................................

முகவரி : ..............................................

..............................................

..............................................

தொலைபேசி:..............................................



✱ சரவணன்

# புத்தி ஹெல்த்தியாக...

சம்மரில், உடம்பு கட்டும் ஹெல்த்தியாக இருந்து கிளாஸுக்குப் போனா போதுமா? புத்தி ஹெல்த்தியாக வேணாமா? வறுமையெனும் வெப்பத்தைத் தள்ளி வசந்தம் எனும் குளுமை புத்திக்கு வர, என்ன செய்யணும்? வசதியானவர்களுக்கு வகுப்புகள் இருக்கு. ஏழைக்கு என்ன வழி? என்று கேட்கிறார் சடகோப ராமானுஜ தாசன் என்கிற சரவணன்.

''பத்தாவது பெயிலாயிட்டு, எக்ஸாம் சரியா எழுதலை. ப்ளஸ் டூ பெயிலாயிடுவோம். இனி நமக்கு ஹெல்பர் வேலைதான்னு நம்பி... டீக்கடை, துணிக்கடை, ஜூஸ் கடை, மளிகைக் கடையில் ஹெல்பர் வேலை செய்யும் மாணவர்களிடம் நேரிடையாகப் பேசி, 25 பேரைத் தேர்வு செய்து வேலையை விடச் செய்து, நாங்கள் கம்ப்யூட்டர் பயிற்சி அளித்து ஸ்ரீராமானுஜர் பிறந்த நாளில் வேலை வாய்ப்பும் வாங்கித் தந்தோம்'' என்கிறார் சென்னை, பெரம்பூரில் ஸ்ரீராமானுஜ சாரிடபிள் டிரஸ்ட் நடத்தி வரும் இவர். இந்த அறக்கட்டளையில் ஏழை மாணவர்களுக்கு ஏ,பி,சி,டி தெரிந்தாலே போதும். மாதம் முந்நூறு ரூபாயில் 6 மாத கம்ப்யூட்டர் பயிற்சி அளித்து, புராஜக்ட் வொர்க்குக்குத் தயார்ப்படுத்தி விடுகிறார்கள். 8வது படித்தவர்க்கு DMO பயிற்சி; பிளஸ்டூ பெயிலானவர்க்கு BPO பயிற்சி... என மலிவான கட்டணத்தில், சேவை மனப்பான்மையுடன், மகான் ஸ்ரீராமானுஜரின் தொண்டினை, எண்ணத்தை நடைமுறையில் செயல்படுத்தி வருகிறது இந்த அறக்கட்டளை. இஸ்லாமிய, கிறிஸ்துவ, இந்து மாணவர்களுக்கு, தம் ஏழ்மையை விரட்ட வேண்டும் என்ற எண்ணம் மட்டுமே இருப்பதால், இங்கு மதம் இரண்டாம்பட்சமே! மக்களிடம் உதவி பெற்று, மக்களுக்கே பணிபுரியும் சேவையில் மகேசனின் சிரிப்பு தெரியும்தான்.

- அமிர்தா





✱ வகுப்பில்...

# தர்மத்தின் தலைவி

ஸ்ரீ லலிதா

நான்காம் பாகம்

30 சுதா சேஷய்யன்

**பஞ்சமீ** - ஐந்தைந்தாக எதையெல்லாம் சொல்லலாமோ, அவற்றுக்கெல்லாம் தலைவி. **த்ரயீ** என்பது மும்மூன்றான விஷயங்களின் தலைவியாய் அம்பாள் இருப்பதைக் குறிக்கும் திருநாமம். **பஞ்சமீ** என்பது ஐந்தாக உள்ளவற்றைக் குறிப்பது - பஞ்ச ப்ராணனில் ஆரம்பித்து, பஞ்ச இந்த்ரியங்கள் - அவற்றுள் கர்மேந்திரியங்கள் ஐந்து, ஞானேந்த்ரியங்கள் ஐந்து, பஞ்ச பூதங்கள் ஐந்து என ஐந்தைந்தாக உள்ளவற்றுக்கு ஆதாரமாக ஸ்ரீ லலிதாம்பிகையே இருக்கிறாள்.

**பஞ்சபூதேசீ** - பஞ்சபூதங்களின் அதிகாரி.

**பஞ்சஸங்யோபசாரிணி** - ஐந்து விதமான உபசரணைகள் செய்வதால் ப்ரீதி அடையக்கூடியவள். தூபம், தீபம், கந்தம், புஷ்பம், ஆத்மம் என்கிற ஐந்தினால் உபசாரம் செய்யும்போது, ப்ரீதி அடைகிறாள். ஆத்மம் என்பதற்குப் பதில் நைவேத்யம் என்று சேர்த்துக் கொள்வதும் உண்டு. அது நாம் செய்யும் உணவு நிவேதனமாகவும் இருக்கலாம்; அல்லது ஆத்ம நிவேதனமாகவும் இருக்கலாம்.

சாச்வதமாக இருக்கக்கூடியவள் அம்பிகை என்பதனால் **சாச்வதீ** என்கிற திருநாமம் அவளுக்கு.

**சாச்வத ஐச்வர்யா** - நிலையான செல்வத்தை வழங்கக்கூடியவள். சாச்வதம் அற்ற செல்வம் அல்ல... இந்தப் பக்கமாக வந்துவிட்டு, அந்தப் பக்கமாக வட்டியோடு சேர்ந்து வெளியேறும் செல்வம் அல்ல... சாச்வதமான அனுக்ரஹம் என்கிற செல்வத்தைத் தரக்கூடியவள்.

**சர்மதா** - சுகத்தைத் தரக்கூடியவள். சுகமாக இருக்கக்கூடியவள்.

**சம்புமோஹினி**- சம்புவாக இருக்கக்கூடிய சிவகாமேசுவரருக்கு மோகத்தைத் தரக்கூடியவள் சம்பு மோஹினி.

**த்⁴ராதரஸுதா** - இதை இரண்டாகப் பிரிக்கலாம். த்⁴ரா - ப்ருத்வி ஸ்வரூபமாக இருக்கக்கூடியவள். த்⁴ரம் என்றால் பூமி. அதிலிருந்துதான் தரை என்கிற வார்த்தை வந்தது.

**த்⁴ரஸுதா** - ப்ருத்விக்குத் (பூமிக்கு) தலைவனாக இருக்கக்கூடிய மலையான ஹிமவான் - அவனது ஸுதா - புதல்வி அம்பாள் என்பதால் த்⁴ரஸுதா.

**தன்யா** - தன ஸ்வரூபமாக இருக்கக்கூடியவள். அவளே செல்வம்.

**தர்மிணி** - தர்மத்தின் தலைவி. தர்மவர்த்தினி - தர்மத்தைத் தரக்கூடியவள்.

**லோகாதீதா** - லோகத்துக்கெல்லாம் அதீதமாக, இந்த உலகத்தையும் அண்டத்தையும் தாண்டி, கடந்து இருக்கக்கூடியவள்.

**குணாதீதா** - ராஜஸம், தாமஸம், ஸத்வம் என்ற மூன்று குணங்களையும் கடந்தவள். ஸர்வத்தையும் தாண்டி, கடந்து **ஸர்வாதீதாவாகவும்** இருப்பவள். என்னதான் வார்த்தைகளில் சொல்லிக்கொண்டே வந்தாலும், அந்த வார்த்தைகளுக்கும் வர்ணனைகளுக்கும் அப்பாற்பட்டவள்.

**சமாத்மிகா** - சாந்த ஸ்வரூபிணி

யாக இருப்பவள். சாந்தமான ஆத்ம அனு பவத்தைத் தரக்கூடியவள் சமாத்மிகா.

## தேஜஸ் தெறிப்பு

**பந்தூககுஸுமப்ரக்யா** - பிரகாசத்தையே மலராக சிருஷ்டி செய்தால் எப்படி இருக் கும்...? அதுதான் பந்தூக மலர்! பந்துஜீவ மலர் என்பது சாதாரணமாக அதற்குப் பெயர். வங்காளத்தில் இந்த மலர் அதிக மாகக் காணப்படுவதாகச் சொல்லப்படு கிறது. இந்த பந்துஜீவ மலர் பளபள வென்று இருக்கும் - வெளிர் சிவப்பாக இருக்கும் என்பார்கள். இதைத்தான் சில பேர் பாடலீமலர் என்பார்கள்.

ஏற்கெனவே **பாடலீகுஸுமப்ரியா** என்ற திருநாமம் பார்த்தோம். பாடலீ புஷ்ப குஸுமத்தை விரும்புகிறவள் அம்பாள் என்று அறிந்தோம்.

அப்படியில்லாமல், தேஜஸ் என் பதையே மலராகக் கொண்டால், அந்த மலரினால் ப்ரீதி அடையக்கூடியவள் அம்பிகை என்பது பொருள்.

இதை எப்படிப் பொருத்திப் பார்க்க லாம்? மகரந்தம் உள்ள மலர்க்கொத்தைப் பார்ப்போம். சைதன்யம் என்பதே ஒரு பூங்கொத்தாக இருக்கிறது. சித் ஸ்வரூப மானது பளபளவென்று தேஜஸோடு இருக்கக்கூடிய வடிவம். பாரதி பாடுகிற போது 'தழல் வீரத்தில் குஞ்சென்றும் மூப்பென்றும் உண்டோ?' என்றானே, அந்த மாதிரி பிரகாசமாக இருக்கிறது சித் ஸ்வரூபம். அந்த சித் ஸ்வரூபமாகிற மலரை அம்பிகை ப்ரீதியோடு அனுபவிக் கக்கூடியவள்.

**பாலா** - இளமையான பாலா - கன்ய குமாரியாகத் தோற்றம் அளிக்கக்கூடியவள் ஸ்ரீலலிதாம்பிகை.

**லீலாவினோதினி** - எல்லாவிதமான திருவிளையாடல்களையும் வினோதமாகச் செய்யக்கூடியவள் லீலா வினோதினி.

**சுமங்கலீ** - சுமங்கலியாக மங்கல த்தைத் தரக்கூடியவள். சுவாஸினிகளா ஆராதிக்கப்படக்கூடியவள்.

**சுககரீ**- சுகங்களைத் தரக்கூடியவள்.

**ஸுவேஷாட்யா** - அழகான வேட இட்டுக்கொண்டிருப்பவள் என்று அர்த்தட அழகு மிளிரத் தோன்றக்கூடியவள். இந் இடத்தில் வேஷம் என்பது தோற்ற த்தையே குறிக்கும்.

**சுவாஸின்யர்ச்சன ப்ரீதா**- சுவாஸின களால் அர்ச்சிக்கப்படக்கூடியவள். அதற் ப்ரீதி அடையக்கூடியவள்.

**இளமையான பாலா கன்யகுமாரியாக தோற்றம் அளிக்கக்கூடியவள் ஸ்ரீ லலிதாம்பிகை.**

**(அ)ஷோபனா** - இந்தத் திருநாமத்தின் முன் 'அ'கரம் சேர்த்துக் கொள்ள வேண் டும். ஷோபனா என்ற திருநாமத்தை ஏற் கெனவே பார்த்துள்ளோம்-அழகு படைத்த வள் என்று அதற்குப் பொருள். **அஷோபனா** என்றால் அதிகமான அழகு படைத்தவள்.

**சுத்தமானஸா** - சுத்தமான மனதை உடையவள்.

## மணக்கோல மகிமை

**பிந்துதர்பணசந்துஷ்டா**- பிந்து ஸ்தானத் தில் வைத்து ஆராதித்தால் அதற்காகச் சந் தோஷம் அடையக்கூடியவள். தர்ப்பணம் என்பதே த்ருப்தி செய்யக்கூடிய எந்த வொரு காரியத்தையும் குறிக்கும் பெயர்.

ஆராதனையை எப்படிச் செய்வது? எங்கே வைத்து ஆராதித்தால் அம்பாளுக் குச் சந்தோஷம்? என்று கேட்டால்... தகராசமாக இருந்தாலும் சரி, சஹஸ்ரார



பத்மமாக இருந்தாலும் சரி, அல்லது அதற்கும் மேலே உள்ள பிரம்மரந்தரமாக இருந்தாலும் சரி - எந்த இடத்தில் வைத்து ஆராதித்தாலும் பிந்து ஸ்வரூபமாக - சிவ-சக்தி ஐக்கிய வடிவமாக வைத்து ஆராதித்தால், அதற்கு மகிழ்ச்சியும் பூரிப்பும் அடைகிறாள். அதனால்தான் அபிராமி பட்டர் திரும்பத் திரும்பச் சொல்கிறார் - 'நீயும் நின் கணவரும் நீங்கள் திருமணக் கோலமும்' 'எந்நாளும் என் பற்று பொருந்துகவே' என்கிறார். ''சஹஸ்ரார பத்மத்துக்கு மேலே உள்ள பிரம்மரந்திரத்தில் நீங்கள் இரண்டு பேரும் நடனமாட வேண்டும்'' என்று கேட்டாரே... அந்த மாதிரி ஆராதித்தால் **பிந்துதர்பண சந்துஷ்டாவாக** இருக்கக்கூடியவள்.

**பூர்வஜா** - எல்லாவற்றுக்கும் முதலானவள். மூலமாக இருக்கக்கூடியவள். அவளிடமிருந்தே மற்ற எல்லாம் தோன்றின.

**த்ரிபுராம்பிகா**- இந்த பூர்வஜா என்பதை அந்த த்ரிபுரத்துடன் தொடர்புபடுத்த வேண்டும். ஏனென்றால் த்ரிபுரவாஸினி, திரிபுரமாலினி, திரிபுரை என எல்லாமே திரும்பத் திரும்ப வரக்கூடிய நாமங்கள். ஒவ்வொரு இடத்திலும், அதன் கூடவும் முன்னும் பின்னும் வரக்கூடிய நாமத்தை வைத்து, அதன் பொருள் கொஞ்சம் கொஞ்சம் மாறுபடும்.

மற்ற இடங்களில் திரிபுரசுந்தரி என்று சொன்னால், திரிபுராந்தகனான பரமேசுவரனின் பத்னி என்று எடுத்துக் கொள்ளலாம். இங்கே த்ரிபுராம்பிகா என்று சொன்னால், அம்பிகா என்பது அம்மா என்ற பொருளில் வரும். திரிபுரத்தையும் தோற்றுவித்தவள் என்று பொருள்.

எந்த திரிபுரம்...? முந்தைய திருநாமம் **பூர்வஜா** என்பதால், எல்லாவற்றுக்கும் மூத்தவள் என்ற பொருள் வருகிறது அல்லவா? எல்லாவற்றுக்கும் முதலாக வந்தது மனஸ் தத்துவம். அந்த மனஸ் தத்துவத்துக்கு முதலாக இருக்கக்கூடிய திரிபுரம் என்பது பிரம்மம், அஹம், இதம் என்ற மூன்றும். இந்த மூன்றுக்கும் நடுவில் இருக்கக்கூடிய அம்பிகாவாக, **திரிபுராம்பிகாவாக** இருப்பவள் என்று பொருள்.

## யோக மார்கம்

**தசமுத்ரா ஸமாராத்யா** - அம்பாளை ஆராதிக்கிறபோது, பத்துவிதமான முத்திரைகளால் ஆராதிப்பது என்று ஒரு கணக்கு உண்டு. அப்படி யோக முத்திரைகளால் ஆராதிக்கப்படுபவள்.

அம்பாளை ஆராதிப்பதற்கான பல மார்கங்களுள், தக்ஷிண மார்கம், வாம மார்கம், ஸவ்ய மார்கம் போல, யோக மார்கம் என்பதும் ஒன்று. இந்த மார்க்கத்தில் யோக முத்திரைகளால் ஆராதிப்பார்கள்.

**(வளரும்)**

# சுட்டபழம் வேண்டாமே!

நான்கு வயதில் ஹார்மோனியம் வாசிக்கத் துவங்கி, நம் நாட்டுக்கு ஆஸ்கார் விருதின் பெருமையை வாரித் தந்த இசையமைப்பாளர் ஏ.ஆர்.ரஹ்மானின் பலம், பலவீனத்தை அசைப்போடுகிறார் நமது சிறப்பு நிருபர் கௌதம்ராம். பலத்தை ரஹ்மானின் நண்பர்களிடமிருந்தும், பலவீனத்தை கோலிவுட் கோமான்களிடமிருந்தும் பெற்றளித்துள்ளார்!

**ப்ளஸ்**

✱ நிதானம் - எல்லா திரைப் பட வாய்ப்புக்களையும் வாரிப் பூசிக் கொள் ளாத திட்ட மிட்ட நிதானம்.

✱ வந்தே மாதரம், தாய்மண்ணே... தனிப் பாடல்கள் மூலமும் நாட்டு எழுச் சியை ஊட்ட முடியும் என்று நிரு பித்தது.

✱ நிறைய புதுக்குரல் களை அறிமுகப்படுத்தி புகழ் ஏணியில் ஏற்றி விட்டது.

✱ 'எல்லாப் புகழும் இறை வனுக்கே' என்ற தலைக்கனம் இல்லா சரணாகதி.

✱ இஸ்லாமிய மதத்தைச் சேர்ந்த ரஹ்மானுக்குக் கிடைத்த, இசை மரபில் வளர்ந்த தாத்தா - ராஜ கோபால பாகவதர் மற்றும் அப்பா - ஆர்.குலசேகர்.

✱ எட்டாம் வகுப்பில் படிப்பு பாதியில் நின் றாலும், லண்டன் இசைக்கல்லூரியில் மேற்கத்திய கிளாசிகல் இசையைக் கற்றது.

✱ லியோ காபி, ஏஷியன் பெயின்ட்ஸ், டைட்டன் வாட்ச் போன்ற தம் பெயர் போடாத விளம்பரப் படங் களுக்கு இசையமைத்து, ரசிகர் மனத்தில் நின்றது.

✱ தொடர்ந்து புதுமைகளைச் செய்ய சர்வ சதா காலமும் யோசிக்கும் புத்தி.

**மைனஸ்**

✱ படுநிதானம் - குறித்த நேரத்தில் இசையமைத்து முடிக்காமல், கோடிக் கணக்கான முதலீடுகளைக் காக்கவைத்து, வேறு இசையமைப்பாளரை நாடி ஓடச் செய்வது.

✱ இசைக்கருவிகளின் அதீத ஆக்ர மிப்பு டிரெண்டுக்கு பிள்ளையார் சுழி போட்டது.

✱ தனித்துவம் அற்றவர்களையும் ஒரே ஒரு பாடல் மூலம், உச்சாணி யில் பாடகராக உட்கார வைத்துவிடுவது.

✱ நம் ரசிகர்களும், சினிமாக்காரர்களும் அறிந்திராத அயல் நாட்டு டியூன்களைச் சுட்டு, சிங்காரித்து நம்மை மயக்கி விடுவது.



**- கௌதம்ராம்**

**சி**ம்மரில் வெளிவந்த திரைப்படங்களின் பெயர்களுக்கும் ஹெல்த்துக்கும் ஏதாவது தொடர்பு உண்டா? (சிலவற்றைப் பார்த்து உங்களுக்குக் கடும் தலைவலி உண்டாகியிருக்கலாம் என்பது வேறு விஷயம்!) 'வலை'யில் ஆராய்ந்தபோது கிடைத்த சில தகவல்கள் இதோ...



## மருந்தாகும் சுறா!

**மி**கவும் ஆழமான குளிர்ப் பகுதிக் கடலிலிருந்து பிடிக்கப்படும் சுறாவிலிருந்துதான் எண்ணெய் எடுக்கப்படுகிறது. காயங்களை ஆற்ற, ஜீரணப் பிரச்னைகள் தீர என்று பல நூற்றாண்டுகளாகவே ஐரோப்பியர்கள் சுறா எண்ணெயைப் பயன்படுத்தி வருகிறார்கள். கடந்த ஐம்பது வருடங்களாக சுறா எண்ணெய்க்கு வேறொரு பயன்பாடு தெரிய வந்துள்ளது. இதனால் மனித உடலில் நோய் எதிர்ப்புச் சக்தி அதிகரிக்கிறதாம்.

புற்றுநோய் பாதிக்கப்பட்ட, கீமோதெரபி சிகிச்சை பெற்றுவரும் குழந்தைகளுக்கும், சுறாவின் எலும்பு மஜ்ஜை பயன்படுகிறதாம். அதாவது இதனால் வெள்ளை அணுக்களின் எண்ணிக்கை அதிகமாகிறதாம்.

# அதுதான்



## பாசச் சுழி!

**த**லையில் உள்ள மயிர் வளரும்போது ஸ்ப்ரிங் வடிவில் சுழன்று வளர்ந்தால், அதை சுழி என்கிறோம். இதை ஆங்கிலத்தில் 'COW LICK' என்கிறார்கள். ஏன் இந்தப் பெயர்? ப தன் கன்றினை பாசத்தோடு அடிக்கடி நக்கு போது, கன்றின் உடலிலுள்ள ரோமம் ஒருவி சுழி வடிவத்தை அடைகிறதாம். அதனால்தா இந்தப் பெயர். தலையில் இரட்டைச் சு இருந்தால் சிலர் அதிர்ஷ்டம் என்கிறார்கள் வேறு சிலர் இரண்டு பெண்டாட்டிக்காரனா இருப்பான் என்கிறார்கள். ரெட்டைச் சு இருப்பவர்களுக்கு இருபங்கு ஆயுள் என்பவ களும் உண்டு. ஆனால், இது தொடர்பா எந்த ஆராய்ச்சி முடிவும் வெளியாகவில்லை என்பதால், மருத்துவ உலகம் இதையெல்லா ஏற்றுக் கொள்வதில்லை.

## சீறாத சிங்கம்!

முரட்டுச் சிங்கம் என்றவுடனேயே கிலி கொள்ளத் தேவையில்லை. பொதுவாகச் சிங்கங்கள் மனிதனைத் தங்கள் உணவாகக் கருதுவதில்லை. சொல்லப் போனால், மனிதனை அவை தவிர்க்கவே நினைக்கின்றன. சின்ன ஜீப்பில் ஏறிக் கொண்டு சஃபாரிக்குள் சென்று சிங்கங்களைப் பார்த்திருப்பீர்கள். அப்போது சிங்கங்கள் உங்களை ஒரு பொருட்டாகவே நினைக்காததை உணர்ந்திருப்பீர்கள். முரட்டுத் தைரியத்துடன் அந்த ஜீப்பிலிருந்து நீங்கள் இறங்கினாலும், சிங்கங்கள் உங்களை விட்டுத் தள்ளிச் செல்லவே வாய்ப்பு அதிகம்.

உடலில் ஏதோ காயம் ஏற்பட்டு, தன் இரை மிருகங்களை வேட்டையாட முடியவில்லை என்றால் மட்டுமே, சிங்கங்களின் கவனம் மனிதனின்மீது விழும். சிங்கக் குட்டிகளுக்கு மனிதனால் ஏதாவது ஆபத்து என்றால், சிங்கத்துக்கு ஆக்ரோஷம் வருவது இயல்பு.



ஆண் சிங்கங்களுக்குப் பிடரி இருப்பது எதற்காக? பிடரி காரணமாகப் பெரிதாகக் காட்சி அளிப்பதால், எதிரிக்கு பயம் உண்டாக்கவும், பெண் சிங்கங்களைக் கவரவும் தான். பிடரியால் வேறொரு பலனும் உண்டு. எதிரியுடன் போராடும் போது சிங்கத்தின் கழுத்துப் பகுதியை பிடரி பாதுகாக்கிறது.

# ...னா அது இல்லை!

## பளபள பையா!

டீனேஜ் என்பது உற்சாகமான பருவம். அதோடு உடலுக்குக் கொஞ்சம் சோதனையையும் கொடுக்கும் பருவம். ஹார்மோன் மாறுதல்கள், அதிகப்படி எண்ணெய் உற்பத்தி, வியர்வை எல்லாமாகச் சேர்ந்து, உடலில் அங்கங்கே புள்ளிகளைத் தோற்றுவிக்கலாம். முகம் மட்டுமின்றி தோள், முதுகு ஆகியவற்றிலும் இப்படி நேரலாம். கவலைப்பட வேண்டாம். கோடையில் ஒருமுறைக்கு இருமுறை குளியுங்கள். முகத்தை அடிக்கடி கழுவுங்கள். ஒவ்வொரு முறையும் சோப்புப் போட வேண்டாம். ஆண்களுக்கென்றே பலவித சரும பராமரிப்புப் பொருள்கள் கடைகளில் உண்டு. அவற்றில் தரமான நிறுவனத்தின் ப்ராண்டுகளை வாங்கிப் பயன்படுத்துங்கள். 'டோனர்' (toner) என்பது உங்கள் சருமத்தின் மினுமினுப்பை மேம்படுத்தும். 'மாய்ஸ்ரைசர்' உங்கள் முகத்தை வழவழப்பாக வைக்கும். வைட்டமின் ஸ்ட்ரிப் கொண்ட ரேஸர்கள் வந்துவிட்டன தெரியுமா? இதனால் ரேஸர் ஏற்படுத்தும் எரிச்சல் உணர்வு மறைந்துவிடும்.





இவர்களை எப்படி வகைப்படுத்துவது என்பது தெரியாமல், பாதி மனிதர்கள் பாதி விலங்குகள் என்று வருணித்தார்கள் ஐரோப்பியர்கள். இப்போதும்கூடப் பலர் இவர்களை ஒரு விநோதமான உயிரினமாகத்தான் பார்க்கிறார்கள். கடுமையான, கொடுமையான பாலைவன வெயிலைப் புறக்கணித்துவிட்டுச், சர்வ சாதாரணமாக வாழ முடிகிறது என்றால், நிச்சயம் இவர்கள் சாத்தானின் குழந்தைகளாக இருக்க வேண்டும், அல்லது கடவுளின் அருளாசியைப் பெற்ற குழந்தைகளாக இருக்க வேண்டும்.

போட்ஸ்வானா, நமீபியா, தென் ஆப்பரிக்கா ஆகிய பகுதிகளை உள்ளடக்கியது கலஹரி பாலைவனம். கலஹரி என்பதன் பொருள் தீராத தாகம்.

கிட்டத்தட்ட இருபதாயிரம் ஆண்டுகளாக, புஷ்மென் அல்லது பஸர்வா அல்லது சான் என்று அழைக்கப்படும் புதர் மனிதர்களின் இருப்பிடமாகக் கலஹரி இருந்து வருகிறது.

வேட்டையாடும் சமூகமாக மட்டுமே இருந்து, சமீபத்தில்தான் வேறு சில தொழில்களையும் பழக்கிக்கொண்டார்கள். இவர்களைத் தேடி யாரும் கலஹரிக்குச் செல்வதில்லை என்பதால் 'நாகரிக உலகின்' தாக்குதல்களில் இருந்து ஓரளவுக்கு விலகி சுகமாக இருக்கிறார்கள்.

கிடைக்கும் பொருள்களில் வீடுகளை அமைத்துக்கொள்கிறார்கள். மரக்கிளைகளைக் கொண்டு மேற்கூரை அமைக்கப்படுகிறது. நன்கு வளர்ந்த நீண்ட புற்களைக் கயிறு கொண்டு கட்டி, கூரைக்கு மேலே பரத்தி வைக்கிறார்கள். வெயில் அதிகம் ஊடுருவாமல் இது ஓரளவுக்குத் தடுக்கும். எங்காவது செல்லவேண்டியிருந்தால், வெப்பத்தில் இருந்து தப்பிக்க, இரவு நேரங்களைத் தேர்ந்தெடுத்துக்கொள்கிறார்கள். ஏதாவது பாட்டுப் பாடிக்கொண்டு ஒரு குழுவாக நடக்கிறார்கள்.

ஒரு வாரத்தில் 32 மணி நேரங்களை உணவு தேடுவதற்கு மட்டும் இவர்கள் செலவிடுகிறார்கள்.

பாலைவனத்தில் விளையும் பூ, கனி, காய் வகைகளைச் (விஷத்தன்மை கொண்டவற்றை நீக்கிவிட்டு) சேகரிக்கிறார்கள். வேர்கள் முக்கியம். நீர் இல்லாத குறையை இந்த வேர்கள் போக்குகின்றன. கள்ளிச்செடிகளைப் பறித்து முள் அகற்றி, பச்சை நிற மேல்தோலை கவனமாக உரித்து எடுத்து உண்கிறார்கள்.

கள்ளி தன் தோலில் நீரைச் சேமிக்கிறது. வனப் பகுதிகளில் எப்போதேனும் விலங்குகள் தென்பட்டால், பரவசத்துடன்



-மருதன்



வேட்டையாடுகிறார்கள். நெருப்பு மூட்டி சமைக்காத சமயங்களில், மாமிசத்தை அப்படியே மணலில் புதைத்துவிடுகிறார்கள். வெயிலும் மணல் சூடும் மாமிசத்தை ஒரு பதத்துக்குக் கொண்டு சென்றுவிடுகிறது.

வான்கோழியின் முட்டை ஓட்டை சுத்தப்படுத்தி நீர் சேமிக்கப் பயன்படுத்துகிறார்கள். கடும் வறட்சியால் சில சமயம் தொடர்ந்து பல வருடங்களுக்கு நீர் கிடைக்காமல் போவதும் உண்டு. அந்தச் சமயங்களில், மணல் பரப்பில் மிக ஆழமாகத் தோண்டி நீர் கிடைக்குமா என்று தேடுகிறார்கள்.

வெயில் வாட்டி எடுக்கும் சமயங்களில், வீட்டுக்குள் இருந்தபடி தயாரிப்பு வேலைகளில் ஈடுபடுகிறார்கள். குறிப்பாக, பூச்சிகளைச் சுத்தப்படுத்திச் சேமித்துக் கொள்கிறார்கள்.

வறட்சியான பொழுதுகளில், இவர்கள் மேற்கொள்ளும் மற்றொரு முக்கியப் பணி, அம்புகளைக் கூர்மைப்படுத்தி, விஷம் தடவி வைப்பது. குடு, டிக்டிக் போன்ற மான் வகைகளையும் எருமைகளையும் வேட்டையாடுகிறார்கள். விலங்குகளைக் கொன்ற பிறகு, அவற்றின் ஆவிகளுக்கு நன்றி தெரிவித்து வணங்குகிறார்கள்.

ஆனால், இவர்களது அதிமுக்கிய பிரச்னை நீர் கிடைக்காததோ, வெயிலோ, குளிரோ, வனவிலங்குகளோ அல்ல. மனிதர்கள்தாம். 1990-கள் தொடங்கி போட்ஸ்வானா அரசாங்கம் இவர்களை வெளியேற்றும் முயற்சியில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறது. உங்களுக்கு நாகரிகம் கற்றுத் தருகிறோம், தொழில் பயிற்சி அளிக்கிறோம் என்னும் போர்வையில், வெளியேற்றங்கள் நடந்து கொண்டிருக்கின்றன. போட்ஸ்வானாவின் மத்திய கலஹரி பூங்காவை விரிவுபடுத்தி, உலகம் முழுவதிலும் இருந்து சுற்றுலாப் பயணிகளைத் திரட்டுவது அரசாங்கத்தின் எண்ணம். அதற்கு இந்தப் புதர் மனிதர்கள் தடையாக இருக்கிறார்கள்.

இன்னொரு காரணம், புதர் மனிதர்களின் வசிப்பிடங்களில் ஒளிந்திருக்கும் கனிம வளம்.

# புதர் மனிதர்கள்





''அந்தப் பெண் மணிக்கு சுமார் நாற்பது வயது இருக்கக்கூடும். வந்து அமர்ந்தவுடன், 'சொல்லுங் கம்மா' என்றேன். அவர் ஒன்றுமே பேசவில்லை. கண்களில் நீர். ''டாக்டர் கடந்த ஐந்து வருடமாக அவதிப் பட்டு வருகிறேன். என் மன நிம்மதியே போச்சு; தூக்கமும் போச்சு'' என்றபடி, புடைவையை இலேசாக விலக்கி இடுப்புப் பகுதியைக் காட்டினார். அவர் பூஞ்சைப் படையால் (Fungal Eczema) பாதிக்கப்பட்டிருப்பது தெரிந்தது.

'இடுப்புப் பகுதி மட்டுமல்ல டாக்டர்; அக்குள், மார்பு மடிப்பு, தொடைப் பகுதி என... எல்லா இடங்களிலும் இது இருக்கிறது. ஒரே அரிப்பு. எப்போதும் சொறிந்து கொண்டே இருக்க வேண்டும் போலிருக்கிறது. சொறிந்தால் இதமாக இருக்கிறது. சொறிந்து முடித்த பின் எரிச்சல். நானும் பல களிம்புகளை (ஆயின்ட்மென்ட்) தடவிப் பார்த்து விட்டேன். அப்போ தைக்கு அடங்கி இருப்பது போல இருக்கும். ஆனால், கோடைக்காலம் வந்தால், கொடுமை துவங்கி விடுகிறது. பாதிக்கப்பட்டிருக்கும் இடங்களை டாக்டரிடம் காட்ட வேண்டியிருக்குமே என்று வெட்கப்பட்டுக் கொண்டே, நானாக மருந்துக் கடைகளின் தயவில், சமாளித்து வந்தேன். ஆனால், இனி பொறுக்க முடியாது என்ற நிலை வந்து விட்டது' என்று முடித்தார் அந்தப் பெண்.



* என்.ஆர்.ஜெயகுமார்

கோடைக்காலத்தில் கோடை ஜலதோஷம், கோடை தலைவலி, வயிற்று போக்கு, மஞ்சள் காமாலை, சிறுநீரகப் பிரச்சனை தட்டம்மை, வெயில் கட்டிகள், வியர்க்குரு போன்ற குறைபாடுகள் மக்களைத் தாக்கினாலும், இந்தப் பூஞ்

# முள்ளை முள்ளா

சைக் காளான் பாதிப்புதான் மிக அதிகமாக இருக் கிறது என்பதை, என்னிடம் வரும் பேஷண்டுகள் லிருந்து தெரிந்து கொள்கிறேன் அதிக அளவில் வியர்ப்பது, அதன் காரணமாக ஏற்படும் அரிப்பு உள்ளாடைகளைத் தொடர்ந்து இரண்டு மூன்று நாட்கள் அணிவது, மற்றும் உஷ்ணம் காரணமாகத் தீய பாக்டீரி யாக்கள் உருவாக்குவது





* விஷமே மருந்தாகி...

ன் இந்த பூஞ்சைப் டை.

பாதிக்கப்பட்ட பண்மணிக்கு ஹாமியோபதி நந்து தந்தேன். ஒரு ரம் கழித்து மீண்ம் வந்தார் அந்தப் பண். முகத்தில் லர்ச்சி. ''டாக்டர் தாண்ணூறு சதவிகி ம் குணமாயிற்று'' ன்று சொன்னார். ந்த கேஸை எதற்கா



✱ சரசபாரில்லா தாவரம்



உதாரணமாகக் கோடையில் சிறுநீர்க் கடுப்பு ஏற்படும். இதற்கு தேனீயின் விஷத்திலிருந்து எடுக்கப்பட்ட சரசபாரில்லா என்ற மருந்து நல்ல நிவாரணம். தேனீ கொட்டிய கடுப்பும் சிறுநீர்க் கடுப்பும், கொடுக்கும் குடைச்சல் ஒரே மாதிரிதான். முள்ளை முள்ளால் எடுக்கும் மருத்துவம் ஹோமியோபதி'' என்கிறார் அவர்.

# டுக்கலாம்!

ர் சொல்கிறேன் என்றால், ஹோமியோவில் உடனடி வாரணம் கிடைக்காது ன்ற விமர்சனம் இருக்கிற ல்லவா; அது சரியல்ல ன்பதுதான் உண்மை,'' என் றார் பிரபல ஹோமியோ தி டாக்டர் ஜெயகுமார்.

''இரசாயனம், அணுக்கரு பான்ற துகள்களாக மாற்றப் ட்டு, அதற்கு வீரியம் காடுக்கப்பட்டு, அதன் ருத்துவக் குணம் மட்டுமே ங்கியிருக்கும்படி ஹாமியோ மருந்துகள் யாரிக்கப்படுகின்றன. இது விர, பாம்பு, மற்றும் தேனீ ின் விஷத்திலிருந்தும் ருந்துகள் உண்டு.

**வெ**ளிநாட்டிலிருந்து சில மருந்துகள் இறக்குமதி செய்யப்பட்டாலும், பெரும்பாலான ஹோமியோ மருந்துகள் இப்போது இந்தியாவிலேயே தயாரிக்கப்படுகின்றன. எந்தவிதமான பக்கவிளைவுகளும் வராதாம். ''நீங்கள் மற்ற நோய்களுக்கு அலோபதி மருந்து சாப்பிட்டாலும், ஒரு குறிப்பிட்ட வியாதிக்காக, ஹோமியோ மருந்து சாப்பிட்டால், எந்த மோசமான விளைவும் ஏற்படாது. கொடுக்கப்படும் ஹோமியோ மருந்து நுண்ணிய அளவில் (micro level) நிவாரணம் கொடுக்கும் வகையில் செயல்படும்'' என்கிறார்.

ஹோமியோ டாக்டரிடம் செல்லும் நோயாளிகள் தங்களுக்குள்ள நோய் அறிகுறிகளை - அது விசித்திரமான சிறு அறிகுறியாக இருந்தாலும் - விவரித்துச் சொல்லிவிட வேண்டுமாம். ''அப்போதுதான் நிவாரணத்துக்கு சரியான மருந்துகள் கொடுக்க முடியும்'' என்றார் டாக்டர் ஜெயகுமார்.

**- ப்ரியன்**



# வாசகர் போட்டி முடிவு!

## ஸ்டார் அஃப் தி சீரீஸ் யார்?

குவிந்த கடிதங்களில், உரிய அ கான காரணத்தோடு ஸ்டார் அஃப் சீரிஸ்க்கான இஷ்டநாயகனைக் குறிப்பிட் எழுதிய வாசகர்களை எழுத்தாளர் ச. கண்ணன் தேர்வு செய்தார். வெற்றிப் பெற் வர்களுக்கு ஓஷன்பெட் வழங்கும் சி.எஸ்.கே டீஷர்ட் பரிசாக அனுப்பப்படும்.

**வெற்றி பெற்ற வாசகர்கள்:**

1. ஜி.வினோத் - திருநெல்வேலி
2. டி.உமாதேவி - சேலம்
3. எஸ்.பி.ரவிச்சந்திரன்- கோவை
4. ஜே.கைலேஷ்குமார் - கோவை
5. ஆர்.சிங்காரவேலன் - திருவிடைமருதூர்
6. எம்.சுரேந்தர் - திண்டுக்கல்
7. ஆர்.சாரதா - திருவான்மியூர்
8. ஆர்.ஏ.அர்விந்த் - கோவை
9. ஜெயலட்சுமி சேஷாத்ரி -கும்பகோணம்
10. எஸ்.ராகவன் - சென்னை

**வெற்றி பெற்றவர்களுக்கு வாழ்த்துகள் கலந்து கொண்டோர்க்கு நன்றி. (ஆர்.**

## போடுங்கய்யா தீர்மானம் - 4



உலகத் தமிழ் செம் மொழி மாநாட்டில் நிறை வேற்ற, தீர்மானங்களைத் தயாரித்து வருகிறது மாநாட் டுக் குழு. தமிழ் அபிமானி களான சிலர் பரிந்துரைக்கும் தீர்மானங்களை வாரம் ஒன்றாக இப் பகுதியில் வழங்குகிறது கல்கி.

தமிழர் திருநாளில் மட்டுமே தூசு தட்டிக் கொண்டாடும் கிராமியக் கலை களை மாவட்டந்தோறும் நடக்கும் அனைத்து அரசு விழாக்களுக்கும் கட்டாய மாகப் பயன்படுத்த வேண்டும் இதற்காக கலைஞர்களுக்கான ஒரு கணக்கெடுப்பும், பதிவு முறையும் ஏற்படுத்த வேண் டும். கிராமியக் கலைஞ களுக்கான வாரியத்தின் மூலம் சலுகைகள் உரு வாக்கி, இவர்களைக் காப பதன் மூலம், தமிழ்க் கலை களையும் கலையின் மூலமாகத் தமிழையும் காக்க அரசு நட வடிக்கை எடுக்க வேண்டும். இதற்கான தீர்மானம் மாநாடு மேடையில் முழங் குமா?

**- இரா.நடராஜன் -**
**நாடக ஆசிரியர், வியாசர்பாடி**

**உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு**

